
ஒவ்வொரு தினமும்
நீங்கள் அழுக்கிலுள்ள
கிருமிகளின் அபாயத்
துக்குள்ளாகலாம்.
இந்தக் கிருமிகளை
லைப்பாய் சோப்பினால்
கழுவிக்களைந்து தினமும்
உங்களைக்காப்பாற்றிக்
கொள்ளுங்கள்.
லைப்பாயின் "பாதுகாக்கும்
நுரை" உங்கள் ஆரோக்கி
யத்தைக்காப்பாற்று
கிறது.
லைப்பாய்
சோப்
தினசரித்தொல்லையான
அழுக்கிலிருக்கும் கிருமி
களிலிருந்து உங்களைப்
பாதுகாக்கிறது.
LIFEBUOY
SOAP
LIFEBUOY
SOAP
இந்தியாவில் தயாரித்தது.
L. 246-50 TM

# கல்கி பொருளடக்கம்

மலர் 14
இதழ் 7

1954 செப்டம்பர் 12

ஜய ௵
ஆவணி 27



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

கல்கி

மலர் 14 | தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 7

# நாயகன் இல்லாத நாடகம்!

இந்த உலகில் உள்ள மாபெரும் வல்லரசுகளின் மதி மந்திரிகள் இருக்கிறார்களே அவர்கள் மகா கெட்டிக்காரர்கள்.

தாங்கள் பிடித்த முயலுக்கு மூன்றே கால் என்று துணிந்து சாதிப்பார்கள்.

அந்தக் கூற்றை நம்ப மறுப்போர்மீது சீற்றம் கொண்டு சீறி விழுவார்கள்.

இன்னும் அவர்கள் வானத்தை வில்லாக வளைப்பார்கள்; மணலைக் கயிறாகத் திரிப்பார்கள்; மணமகன் இராமல் திருமணம் நடத்துவார்கள்; கதாநாயகன், நாயகி இல்லாமலே நாடகம் நடத்த முற்பட்டு விடுவார்கள்!

அவர்கள் நடத்தும் அத்தகைய நாடகம் ஒன்று இப்போது பிலிப்பைன் நாட்டின் தலைநகரான மணிலாவில் நடைபெறுகிறது.

தென் கிழக்கு ஆசியா நாடுகளுக்கு ஏதோ ஆபத்து ஏற்படப் போகிறதாம்.

அத்தகைய ஆபத்து எதுவும் ஏற்படாமல் தடுக்கும் நோக்கத்துடன் கூட்டுப் பாது காப்பு ஸ்தாபனத்தை அமைப்பதே மணிலா மகாநாட்டின் இலட்சியம் என்று முக்கியமாக பிரிட்டிஷ், அமெரிக்க வல்லரசுப் பிரதிநிதிகள் கூறுகிறார்கள்.

ஆசியா நாடுகளுக்கு உண்மையிலேயே ஆபத்து ஏற்பட்டு, அதைத் தடுக்க மேற்படி வல்லரசுகள் முன்வந்திருந்தால் அது போற்றத் தக்கதா யிருக்கும்.

ஆனால், அந்த வல்லரசுகள் கூறுகிறபடி தென் கிழக்கு ஆசியா நாடுகளுக்கு ஆபத்து எதுவும் ஏற்பட்டிருப்பதாகத் தெரியவில்லை.

ஆசியாவில் முக்கிய ஸ்தானம் வகிக்கும் குடியரசு சீனாவுக்கு அந்த மகாநாட்டில் இடம் அளிக்கப்படவில்லை. அந்த மகாநாடும், அதில் விவாதிப்பதற்காக அமெரிக்கா தயாரித்துள்ள நகல் திட்டமும் மற்றொரு மகா யுத்தத்துக்கான பூர்வாங்க ஏற்பாடுகள்தான் என்று சீனக் குடியரசு சர்க்கார் கூறுகிறார்கள்.

மேற்படி மகாநாட்டை பிரிட்டிஷ் தொழிற் கட்சித் தலைவர்கள் கண்டிக்கிறார்கள்.

இந்தியா, பர்மா, இந்தோனேஷ்யா முதலிய நாடுகளும் தங்களுக்கு ஆபத்து எதுவும் ஏற்பட்டுவிட வில்லை என்று கூறி, அம் மகாநாட்டில் கலந்து கொள்ள முற்றிலும் மறுத்து விட்டன.

முக்கிய ஆசிய நாடுகளின் முடிவைக் கண்ட பின், இலங்கையும் அவ்விஷயமாகத் தன் அபிப்பிராயத்தை மாற்றிக் கொண்டு விட்டது; அந்த மகாநாட்டில் கலந்து கொள்வதால் பயனில்லை என்று தீர்மானித்து விட்டது.

பாகிஸ்தான், பிலிப்பைன் தீவுகள், தாய்லந்து இந்த மூன்று நாடுகளைத் தவிர வேறு எந்த ஆசியா நாடும் மணிலா மகாநாட்டில் கலந்து கொள்ளவில்லை.

அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ், ஆஸ்திரேலியா, நியூஸீலந்து முதலிய ஐந்து நாடுகளும் அதில் கலந்து கொண்டுள்ளன.

அதாவது தென் கிழக்கு ஆசியாவைப் பாதுகாப்பதற்காக நடைபெறும் மகாநாட்டில் ஐரோப்பிய நாடுகளே பெரும்பான்மையாக இருப்பது விந்தை அல்லவா?

* * * *

கொரியாப் போர் நின்று தாற்காலிகமாகச் சமாதானம் நிலவி வருகிறது.

சென்ற மாதம் முடிவடைந்த ஜினிவா மகாநாட்டின் பலனாக, இந்தோ சீனா யுத்தம் நின்று அமைதி ஏற்பட்டுள்ளது.

இரண்டாவது மகா யுத்தத்துக்குப் பிறகு உலகில் முதல் தடவையாக ஏற்பட்டுள்ள இன்றைய சமாதான சூழ்நிலையை நீடிக்கச் செய்ய வேண்டியது, உலக அமைதியில் நாட்டம் கொண்டவர்களின் கடமை என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

ஆனால், வல்லரசுகள் மணிலாவில் நடத்த முற்பட்டிருக்கும் மகாநாடு இன்றுள்ள சமாதான சூழ்நிலையைப் பாதிக்கலாம் என்று நேருஜி கூறியுள்ளார்.




அந்த மகாநாட்டின் விளைவாகப் புதிய சிக்கல்களும் கஷ்டங்களும் ஏற்படக்கூடுமே என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

இந்தோ சீனப் பிரச்னை பற்றி ஜினிவா மகாநாட்டில் ஏற்பட்ட ஒப்பந்தத்தை அமெரிக்கா தீவிரமாக எதிர்க்கவில்லை; மனப்பூர்வமாக ஆதரிக்கவும் இல்லை என்பது உலகம் அறிந்த விஷயம்.

எனவே, அமெரிக்காவின் முயற்சியினால் நடைபெறும் மணிலா மகாநாடு, ஜினிவா ஒப்பந்தத்தை உருப்படாமல் போகச் செய்யும் சூழ்ச்சியே என்று முக்கியமாக ஆசியாவின் எதிர்கால க்ஷேமத்தில், அமைதியில் அக்கறைகொண்ட நாடுகள் கலங்குவது இயற்கையே.

இன்று ஆசியாவின் அமைதிக்கும் பாதுகாப்புக்கும் பங்கம் ஏற்படுவதாயின், அதற்கு அமெரிக்காவின் அத்தியந்த நண்பர்களான இரண்டு பிரமுகர்கள்தான் காரண புருஷர்களாக இருப்பார்கள் என்று கூற வேண்டும்.

கொரியா தேசத்தில் மறுபடியும் போர் தொடங்க வேண்டும் என்று சிங்மென் ரீ மிகவும் துடித்துக் கொண்டிருக்கிறார்.

பார்மோசா தீவில் அடைக்கலம் புகுந்துள்ள சியாங்கை ஷேக்குக்கு அமெரிக்கா அனுப்பியுள்ள போர் விமானங்கள், சீனா மீது படையெடுக்கத் தொடங்கியிருக்கின்றன.

இவ்விருவருடைய விஷமங்களையும் அடக்க அமெரிக்கா தகுந்த நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ள முற்பட்டிருந்தால், ஆசியாவின் அமைதியிலும் பாதுகாப்பிலும் அமெரிக்காவுக்கு உண்மையான அக்கறை இருக்கிறதென்று ஏற்படும்.

ஆனால், அந்தகைய முறைகளைக் கைக்கொள்ளாமல் அமெரிக்கா தென்கிழக்கு ஆசியப் பாதுகாப்பு மகாநாட்டைக் கூட்டியிருப்பது முக்கிய ஆசிய நாடுகளுக்கு மிகுந்த கலக்கத்தையே கொடுத்திருக்கிறது.

மற்றும் இந்தியாவில் இந்தியாவுக்குச் சொந்தமான இட்டுப் பிரதேசங்களைக்

# வரவேற்பு !




மணிலாவில் தென்கிழக்கு ஆசியப் பாதுகாப்பு மகாநாடு கூடும் சமயத்தில், குவெமாய் தீவின் மீது குடியரசு சீனு பீரங்கிப் பிரயோகம் செய்து வருகிறது.

கைவிட முடியாது என்று போர்ச்சுகல் சர்க்கார் கோவாவில் தாவா செய்து வருகிறார்கள்.

அந்தப் பிராந்தியத்தில் மும்முரமாக இராணுவ முஸ்தீப்புகளையும் செய்து வருகிறார்கள்.

இந்த அக்கிரமத்தை அமெரிக்க சர்க்கார் பிரமுகர்கள் கண்டிக்காததுடன், போர்ச்சுகலை மறைமுகமாக ஆதரித்தும் வருகிறார்கள்.

இந் நிலையில், ஆசியா நாடுகளுக்குப் பாதுகாப்பு அளிக்கும் விஷயத்தில் தாங்கள் அக்கறை கொண்டிருப்பதாக வல்லரசுகள் பசப்புவதை உண்மை என்று யார் நம்ப முடியும் !

ஆசியாவின் அமைதிக்குப் பங்கத்தை விளைவிக்கக் கூடிய உண்மையான காரணங்களைத் தவிர்க்க முற்படாமல், பெரும்பாலான ஆசியா நாடுகளின் சம்மதமின்றியே அந்த நாடுகளின் விதியை நிர்ணயிப்பதற்காக மகாநாடு கூட்டப்பட்டிருப்பது வேடிக்கையும் விபரீதமுமாக இருக்கிறது அல்லவா !

** ** **

இதற்கு முன் உலகத்தில் பேராதிக்கம் செலுத்திய எத்தனையோ சாம்ராஜ்யங்கள் தேய்ந்து மறைந்து விட்டன.

இனி சாம்ராஜ்யங்களுக்கு உலகில் இடம் இல்லை என்பது உறுதியாகி வரும் இச் சமயத்தில், உலக நாடுகளை மற்றொரு விதமான ஆபத்து சூழ்ந்து வருவது கலக்கத்தைக் கொடுக்கும் விஷயம் என்பதில் சந்தேகம் இல்லை.

அதாவது போன சாம்ராஜ்யங்கள் இன்று வேறு உருவத்தில் திரும்பி வருகின்றனவோ என்று நினைக்க வேண்டியிருக்கிறது.

உதாரணமாக, எதிர்ப் பக்கத்தில் வெளியாகியுள்ள மூன்று படங்களையும் பாருங்கள்.

1945-ம் ஆண்டில் இருந்த ஆசியாவுக்கும் 1954-ல் உள்ள ஆசியாவுக்கும் உள்ள பெரும் வேற்றுமையை இந்தப் படங்கள் காட்டுகின்றன.

1. இது சியாங்கை ஷேக் ஆட்சியின் கீழ் இருந்த சீனவைக் காட்டுகிறது.

2. கருப்பாக இருக்கும் பிரதேசங்கள் கம்யூனிஸ்டுகளின் ஆட்சியில் உள்ள இடங்களைக் குறிப்பிடுகின்றன.

3. பிரிட்டிஷ், அமெரிக்க வல்லரசுகளின் செல்வாக்கும் மறைமுகமான ஆதிக்கமும் பரவியுள்ள நாடுகளைக் காட்டுகின்றன.

4. ஒரு கட்சியிலும் சேராமல் நடுநிலைமை வகிக்கும் நாடுகளைக் குறிப்பிடுகின்றன.

அதாவது ஒன்பது வருஷ காலத்தில் கம்யூனிஸ்டுகளின் ஆதிக்கத்துக்கு வந்துள்ள பிரதேசங்கள் இரண்டு மடங்கு அதிகமாகியிருக்கின்றன.

வல்லரசுகளின் கட்சியில் சேர்ந்து அவைகளுடைய தயவில் வாழும் நிலையை அடைந்துள்ள பிரதேசங்களும் அதிகமாகியிருக்கின்றன.

இந்த உண்மையை "நியூயார்க் டைம்ஸ்" போன்ற பிரபல வல்லரசுப் பத்திரிகைகளே ஒத்துக் கொண்டுள்ளன. பாகிஸ்தானையும் வல்லரசுகளின் கட்சியில் சேர்ந்த நாடாக அப் பத்திரிகை கருதுவது குறிப்பிடத் தக்கது. இந்நிலைமையில் வல்லரசுகள் தென் கிழக்கு ஆசியா நாடுகள் அடங்கிய மகாநாட்டைக் கூட்டுவதன் மூலம்,

கம்யூனிஸ்டுகளுக்குப் போட்டியாகத் தங்கள் கட்சியில் எஞ்சியுள்ள நடுநிலைமை நாடுகளையும் இழுத்துக் கொள்ளச் சூழ்ச்சி செய்கின்றன என்ற சந்தேகம் ஏற்படுவது இயல்பே.

பெரும்பாலான ஆசியா நாடுகளிடையே அத்தகைய சந்தேகத்தை உண்டாக்கியுள்ள மணிலா மகாநாட்டினால் பலன் ஏற்படுவதற்கில்லை.

அதனால் பலன் ஏற்படாவிட்டாலும் விபத்தும் விபரீதமுமாவது ஏற்படாமல் இருக்குமா என்றே கேட்கத் தோன்றுகிறது.

இந்த நிலைமையில் இந்தியா, பர்மா, இந்தோனேஷ்யா போன்ற சில தேசங்களாவது நடுநிலைமையில் உறுதியாக நிற்பது உலக சமாதானத்துக்குப் பாதுகாப்பாக இருந்து வருகிறது எனலாம்.

# காலத்தை வென்ற கவிச் சிரேஷ்டர்

சங்கரரும் புத்தரும் அவதரித்த பாரத புண்ணிய பூமியில்தான் காந்தி மகான் அவதரிக்க முடியும். உலகப் பிரசித்தி பெற்ற இணையற்ற இதிகாசங்களான இராமாயணமும் மகாபாரதமும், தெய்விக கவிகளான கம்பரும் வள்ளுவரும் பிறந்த பாரத நாட்டில் தான் கவிச் சக்கரவர்த்தி பாரதியார் ஜனிக்க முடியும்.

ஒளி, உண்மை, கலைகளுள் தலைசிறந்த இசை, இம்மூன்றும் ஒன்று சேர்ந்துதான் கவிதையாகப் பரிணமிக்கிறது; எனவே அத்தகைய கவிதைகளை இயற்றிய மகா புருஷர்களைக் காட்டிலும் மானிட வர்க்கத்துக்குச் சிறந்த வழிகாட்டி வேறு யாரும் இருக்க முடியாது என்று உலக மேதாவி ஒருவர் கூறியுள்ளார்.

இன்று கவிச் சக்கரவர்த்தி பாரதியாரின் கவிதைகள் அத்தகைய மகோன்னத ஸ்தானத்தை அடைந்திருக்கின்றன என்பதில் சந்தேகம் இல்லை. எதையும் அழித்து மறைக்கும் சக்தி வாய்ந்த காலத்தினால் கூட அந்த மகானின் பாடல்களை அழிக்க முடியாது. அவை சிரஞ்சீவித் தன்மை வாய்ந்தவை. எந்த இடத்துக்கும் எக் காலத்துக்கும் பொருத்தமானவை.

அறிவு கொண்ட மனித வுயிர்களை
அடிமை யாக்க முயல்பவர் பித்தராம்

என்ற உயர்ந்த அரசியல் தத்துவம் எந்த நாட்டுக்கும் எந்தக் காலத்துக்கும் மிகப் பொருந்தும் அல்லவா!

ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்வதால்
அறிவி லோங்கிஇவ் வையந் தழைக்குமாம்

என்ற சமுதாய நீதியும் எத் தேசத்துக்கும் எக் காலத்துக்கும் பொருந்தும் அல்லவா!

எனவே, ஒளியும் உண்மையும் இசையும் இவ்வுலகில் இருக்கும் வரையில் பாரதியாரின் கவிதைகளும் இருந்து வரும்.

இவ்வாறாக உயர்ந்த அரசியல் தத்துவங்களுக்கு, சமுதாய நீதிகளுக்கு, தொழில்களின் உயர்வுக்குக் காலத்தையும் வெல்லும் கவி உருவம் கொடுத்த பாரதியாருக்கு, முக்கியமாகத் தமிழ் நாட்டினர் என்றென்றும் நன்றிக் கடன் பட்டிருக்கிறார்கள்.

அமர வாழ்வு பெற்ற அக் கவிச் சிரேஷ்டரின் விழா முந்திய வருஷங்களைப் போல் இந்த ஆண்டும் சிறப்பாகக் கொண்டாடப் படுகிறது. சென்னையில் பாரதி சங்கத்தின் ஆதரவிலும் எட்டயபுரத்தில் பாரதியார் மண்டபத்திலும் இன்னும் தமிழர் வாழும் சகல இடங்களிலும் பாரதி விழா கொண்டாடுகிறார்கள். இந்த விழாக்களில் ஆங்காங்கு தமிழ் மகா ஜனங்கள் திரளாகக் கலந்து விழாவைச் சிறப்பிக்கக் கோருகிறோம்.

# பகிரங்க விசாரணை நடத்த வேண்டும்

பிரஜா சோஷலிஸ்ட் கட்சியார் இதுவரையில் எந்தக் கட்சியினரும் செய்யாத ஒரு காரியத்தைச் செய்திருக்கிறார்கள். தங்களுடைய நல்ல பெயருக்கும் வருங்கால வளர்ச்சிக்கும் குந்தகம் ஏற்படாத வகையில் நடந்து கொள்ள முற்பட்டிருக்கிறார்கள். திருவாங்கூர் – கொச்சி ராஜ்யத்தின் நிர்வாகத்தை நடத்தும் தங்கள் கட்சி சர்க்காரையே வன்மையாகக் கண்டிக்க பி. சோ. கட்சியினர் தயங்கவில்லை.

தி. கொ. ராஜ்யத்தில் போலீசார் துப்பாக்கிப் பிரயோகம் செய்ததைக் கண்டித்துப் பிரஜா சோஷலிஸ்ட் கட்சித் தலைவர் டாக்டர் ராம் மனோஹர் லோஹியா தமது கட்சிப் பொதுக் காரியதரிசிப் பதவியை ராஜிநாமா செய்திருந்தார் அல்லவா! அதன் காரணமாகத் திருவாங்கூர் - கொச்சி பிரச்னை அகில இந்தியாவின் கவனத்தையே கவர்ந்து விட்டது.

அவ்விஷயமாக, புதுடில்லியிலே நடந்த பி. சோ. கட்சி நிர்வாக சபைக் கூட்டத்தில், தி. கொ. ராஜ்யத்தில் பெரும் தவறு நடந்து விட்டது என்றும், ஆதலின் தமது ராஜிநாமாவை வாபஸ் செய்ய முடியாது என்றும் டாக்டர் லோஹியா கண்டிப்பாக அறிவித்து விட்டார்.

மேற்படி சபையில் நிறைவேறியுள்ள தீர்மானம் பி. சோ. கட்சியின் பெருமைக்கும் பொறுப்பு உணர்ச்சிக்கும் எடுத்துக் காட்டாக இருக்கிறது.

"கூட்டத்தைச் சமாளிக்கப் போலீசார் துப்பாக்கிப் பிரயோகத்தைத் தவிர கண்ணீர்ப் புகை போன்ற வேறு முறைகளைக் கைக்கொண்டிருக்க வேண்டும். கூட்டத்தில் உள்ள ஜனங்களைக் காட்டிலும் போலீசார் அதிகப் பொறுமையைக் கடைப்பிடிக்க வேண்டும். சாதாரண ஜனங்களின் உயிர்களைக் காட்டிலும் போலீசார், அதிகாரிகளுடைய உயிர்கள் உயர்வானவை என்று ஒருபோதும் கருதக் கூடாது. மந்திரிகள் ஆபத்தைக் கண்டு அஞ்சாமல் நேரில் சென்று ஜனங்களின் பலாத்காரச் செயல்களையும் அத்து மீறிய காரியங்களையும் தடுக்க முற்பட வேண்டும். தி. கொ. ராஜ்யத்தில், குறிப்பாக சோஷலிஸ்ட் கட்சி சர்க்கார் நிர்வாகத்தில் துப்பாக்கிப் பிரயோகம் நடந்திருப்பது மிகவும் வருந்தத் தக்கது."

இவ்வாறு தங்கள் கண்டனத்தையும் வருத்தத்தையும் தெரிவித்துக் கொண்டுள்ள பி. சோ. நிர்வாக சபை, துப்பாக்கிப் பிரயோகத்தினால் மாண்டவர்களின் குடும்பங்களுக்கு அனுதாபத்தையும் தெரிவித்திருக்கிறது.

மற்றும், தகுந்த நீதிபதிகளைக் கொண்டு போலீசாரின் துப்பாக்கிப் பிரயோகத்தைப் பற்றிப் பகிரங்கமாகவும் பூரணமாகவும் விசாரிக்க வேண்டும் என்றும் தீர்மானித்திருக்கிறார்கள்.

தி. கொ. ராஜ்யத்தில் போலீசாரின் துப்பாக்கிப் பிரயோகத்தைத் தவிர வேறு பல பயங்கரமான செயல்களும் நடந்திருப்பதாகத் தெரிகிறது. நிரபராதிகள் பல கொடுமைகளுக்கு உள்ளானதாகவும் வீடு புகுந்து பெண்கள் மானபங்கப் படுத்தப் பட்டதாகவும் கூறப்படுகின்றன. மற்றக் கொடுமைகளுக் கெல்லாம் ஏதாவது காரணம் காட்டினாலும் காட்டலாம். பெண்களுக்கு இன்னல் இழைத்து மானபங்கப்படுத்தும் காரியம் காட்டுமிராண்டிகளும் அசார்களுமே செய்யக் கூடியதாகும். இதற்கு எந்த விதமான சமாதானமும் சொல்ல முடியாது. எனவே, திருவாங்கூர் சர்க்கார் பாரபட்சமற்ற நீதிபதிகளை நியமித்து மேற்படி செய்கைகளைப் பற்றியும் விசாரித்துக் குற்றவாளிகள் கடுமையான தண்டனைக்கு உள்ளாகும்படி செய்ய வேண்டும்.

பிரஜா-சோஷலிஸ்ட் தலைவர்களும் சரியான தீர்மானம் நிறைவேற்றியதுடன் திருப்தி அடைந்து இருந்து விடாமல் அது காரியத்தில் நிறைவேறும்படி பார்த்துக் கொள்ளவேண்டும்.

# சேவையும் சேமிப்பும்

சென்ற ஏப்ரல் மாதம் பத்தொன்பதாம் தேதி இந்திய சர்க்கார் தேசிய திட்டக் கடன் பத்திரங்கள் வெளியிட்டது ஞாபகம் இருக்கலாம். இந்த செப்டம்பர் மாதம் பதினாறும் தேதியோடு தேசிய திட்டக் கடனுக்காகப் பணம் ஏற்றுக் கொள்வதைச் சர்க்கார் நிறுத்திவிடத் தீர்மானித்திருக்கிறார்கள்.

சர்க்கார் வகுத்துள்ள ஐந்து வருஷத் திட்டத்தை நிறைவேற்ற மொத்தம் இரண்டாயிரம் கோடி ரூபாய் செலவாகும் என்று மதிப்பிட்டார்கள். இதுவரையில் அத் தொகையில் பெரும் பகுதி செலவாகி யிருக்கிறது. ஏராளமான ஆக்கத் திட்டங்களும் அமுலுக்கு வந்திருக்கின்றன. மீதியுள்ள திட்டங்களைப் பூர்த்தி செய்வதற்கு வேண்டிய தொகைக்காகவே இந்திய சர்க்கார் பொது ஜனங்களிடையே கடன் எழுப்பத் தீர்மானித்தனர். அதன் பலனாகச் சென்ற ஆகஸ்டு மாதம் 21-ம் தேதி வரையில் நாலு மாதங்களுக்குள் பொதுமக்களிடமிருந்து 132 கோடி ரூபாய் வசூலாகி யிருக்கிறது. பொதுமக்களுக்குச் சர்க்காரிடம் உள்ள நம்பிக்கைக்கு இதைக்காட்டிலும் வேறு என்ன உதாரணம் வேண்டும்!

தேசிய திட்டக் கடனுக்கு ஏழைத் தொழிலாளர்களிலிருந்து எல்லோரும் பணம் கொடுத்திருக்கிறார்கள் என்பது குறிப்பிடத் தக்கது. பணம் கொடுத்துத் தேசிய திட்டக் கடன் பத்திரங்களை வாங்குவோர் தேசத்துக்குச் சேவை செய்தவர்கள் ஆகிறார்கள்; பாரதநாட்டின் வரும் கால சுபிட்சத்துக்கு விதை விதைத்தவர்கள் ஆகிறார்கள்; நவ இந்தியாவின் நல்வாழ்வுக்குப் பேருதவி புரிந்தவர்கள் ஆகிறார்கள். பொதுமக்களுக்கு இவ்வளவு மகத்தான பலனும் தங்கள் பணத்தைச் செலவு செய்வதன் மூலம் கிடைக்கவில்லை. சேமிப்பதன் மூலம் கிடைக்கிறது! அவர்களுக்கு மேற்படி சேமிப்புத் தொகை பத்து வருஷங்களில் வட்டியுடன் திரும்பி வந்து விடுகிறது. அதாவது அவர்களுடைய சேமிப்பில் மகத்தான தேச சேவையும் அடங்கி யிருக்கிறது. எனவே, இதுவரையில் தேசிய திட்டக் கடன் பத்திரம் வாங்காதவர்கள் பதினாறும் தேதிக்குள் அந்தப் பத்திரங்களை வாங்கி தேச சுபிட்சத்துக்கான சேவையில் தங்களுக்கும் பங்கு உண்டு என்ற பெருமையையும் திருப்தியையும் அடைவார்களாக!

# இந்திய சர்க்காரின் புதிய உத்தரவு

கொழும்பு, செப். மீ 4வ.

சர்க்கார் உழைப்புத் தொழிலாளர் எவராயிருப்பினும் இந்தியாவுக்குப் போக நேரிட்டால் இலங்கைக்குத் திரும்ப அனுமதிக்கப் படாதென்று சென்ற ஜூலை 30-ம் தேதி பிறப்பித்த உத்தரவை இந்திய மத்திய அரசாங்கம் மாற்றி யிருப்பதாக இவ்வாரம் தகவல் கிடைத்திருப்பது, கொழும்பு போன்ற பெரிய நகரங்களில் பல வேலைகளிலும் ஈடுபட்டிருக்கும் இந்தியத் தொழிலாளருக்கு மிகுந்த ஆறுதல் அளித்திருக்கிறது. 1939-ம் ஆண்டில் அரசாங்க சேவையிலிருந்த இந்தியத் தொழிலாளரை இலங்கை நாடு கடத்த மூற்பட்ட பொழுது அழையாதார் தலைவாசலை மிதிக்கப் படாதென்று தீர்மானித்து இந்திய சர்க்கார் உழைப்புத் தொழிலாளர் இலங்கைக்குப் போகப்படாதென்று டில்லி அரசாங்கம் ஒரு பொதுப்படையான தடை விதித்தது. ஏற்கெனவே இலங்கையிலிருக்கும் தொழிலாளர் மாத்திரம் இந்தியாவுக்கு வந்தால் இலங்கைக்குத் திரும்பிப் போக அனுமதிக்கலா மென்று மேற்படி தடை உத்தரவை 1942-ம் வருடம் சற்றே தளர்த்தி விட்டார்கள். சென்ற ஜூலை மாதம் இந்தச் சலுகையைத் திடீரென்று ரத்துச் செய்து இலங்கையிலிருந்து ரஜாவுக்காக இந்தியா வரும் தொழிலாளர்கூட இலங்கைக்குத் திரும்பக் கூடாதென்று உத்தரவு போட்டார்கள்.

இந்த உத்தரவு இலங்கையில் வசிக்க உரிமையுடையவர்களைக்கூட கடுமையாகப் பாதிப்பதாக முறையிட்டுக் கொண்டதின் பேரில், இந்தியா பாஸ்போர்ட்டும் அதில் இலங்கை திரும்ப அனுமதித்து இலங்கை அரசாங்கத்தினால் வழங்கப் பட்ட வாச பர்மிட்டும் உடையவர்கள் இந்தியாவுக்கு வந்தால் இலங்கைக்குத் திரும்ப அனுமதிக்கப்பட வேண்டுமென்று இந்திய யூனியன் அரசாங்கம் இவ்வாரம் ஒரு புதிய உத்தரவை வெளியிட்டுள்ளது. இதன்படி இலங்கையில் நகரப்புறங்களில் உள்ள தொழிலாளர் மட்டுமே இந்தியாவுக்குப் போய் விட்டுத் திரும்ப முடியும். தோட்டத் தொழிலாளர் நாடற்றவர்கள். அவர்களிடம் இந்தியா பாஸ்போர்ட் கிடையாது. ஆகையால் அவர்கள் இந்தியா போய் வர முடியாது.

## நஷ்ட ஈடு வேண்டும்

இலங்கை அரசாங்கத்தின் நாடு கடத்தும் திட்டத்தின் கீழ் இந்தியர்கள் இங்கிருந்து கோஷ்டி கோஷ்டியாக ஏற்கெனவே இந்தியாவுக்

ளுத் திரும்ப ஆரம்பித்து விட்டனர். இலங்கையை விட்டு வெளியேற இன்னும் மூன்று மாதகாலத் தவணை இருப்பினும்கூட, இலங்கையில் நீடித்திருக்க வழியில்லையென்பது திட்ட வட்டமாகத் தெரிந்து விட்டபடியினால் வாசபர்மிட் உடையவர்கள் கூட இப்பொழுது வெளியேறத் தொடங்கி விட்டனர். அவர்களுக்கு இந்தியாவில் புனர்வாழ்வு அளிக்க உதவிபுரிய வேண்டுமென்றும் என்னென்ன விதமான உதவிகள் அளிக்கப்படலாமென்றும் விரிவாகத் தெரிவித்து இலங்கை இந்திய வர்த்தகச் சங்கம் பாரதப் பிரதமர் நேருவுக்கு இவ்வாரம் ஒரு மகஜரை அனுப்பியிருக்கிறது. இதே போல இலங்கை தற்காலிகவாசிகள் சங்கம் நேருவுக்கு அனுப்பியிருக்கும் இன்னொரு மகஜரில் இலங்கையிலிருந்து வெளியேற்றப்படும் சிப்பந்திகளுக்கு அவர்களது இந்திய முதலாளிகள் ஒரு நியாயமான அடிப்படையில் நஷ்டஈடு கொடுத்து உதவிபுரியா விட்டால் அந்த வியாபாரிகளின் மூலதன இறக்குமதிக்குப் பாரத அரசாங்கம் வரிச்சலுகை ஏதும் அளிக்கக் கூடாதென்றும் இவ்வித நிபந்தனை போடாவிட்டால் முதலாளிகளிடமிருந்து சிப்பந்திகள் நஷ்டஈடு தொகை பெறுவது முடியாத காரியம் என்றும் தெரிவித்துக் கொண்டிருக்கிறது. பல வருட காலம் உழைத்துக் கொடுத்த சிப்பந்திகளுக்கு முதலாளிகள் நிச்சயம் ஏதாவது ஒரு தொகை கொடுப்பார்களென்று இந்திய வர்த்தகச் சங்கம் இனிமையாகச் சொல்லுகின்றபொழுதிலும், "நாங்களே போகின்றபொழுது ஏன் நஷ்ட ஈடுகொடுக்க வேண்டும்!" என்ற மனோபாவமே பெரும்பாலான வியாபாரிகளிடம் நிலவுவதாகக் கூறப்படுகிறது. வரிச்சலுகை வழங்குவதை ஒரு ஆயுதமாக உபயோகித்து எளிய சிப்பந்திகளுக்கு நஷ்ட ஈடு கிடைக்க இந்திய அரசாங்கம் வழி செய்யாவிடில் முதலாளிமார்கள் சிப்பந்திகளுக்கு உதவமாட்டார்களென்ற அச்சம் நிலவுகின்றது. —ரஜனி

# தேசீய மகாசபைத் திருவிழா

தமிழ் நாட்டு மக்கள் அதிர்ஷ்டசாலிகள்தான். கால் நூற்றாண்டுக்குப் பிறகு, சரியாக இருபத்தேழு ஆண்டுகளுக்குப் பின் இந்திய தேசிய காங்கிரஸ் மகா சபையின் அடுத்த கூட்டம் தமிழ் நாட்டில் நடக்கும் வாய்ப்பு நம் எல்லோருக்கும் கிடைத்திருக்கிறது.

காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தை அடுத்த வருஷம் ஜனவரி மாதம் சென்னைக்கு அருகில் உள்ள ஆவடியில் நடத்துவதென்று தீர்மானித்திருக்கிறார்கள்.

வரப்போகும் தேசிய மகாசபைக் கூட்டம் பல விதத்திலும் விசேஷமானது, முக்கியத்துவம் பொருந்தியது. பாரத நாடு சுதந்திரம் பெற்ற பின், அந்தச் சுதந்திரத்துக்கு முழுமுதற் காரணமான மாபெரும் புனித ஸ்தாபனத்தின் கூட்டம் தமிழ் நாட்டில் நடப்பது இதுதான் முதல் தடவை ஆகும். இந்தக் கூட்டம் காங்கிரஸ் மகா சபையின் அறுபதாவது வருஷக் கூட்டம், அதாவது வைர விழாக் கூட்டம் என்பது தமிழ்நாட்டினருக்கு மட்டற்ற மகிழ்ச்சியைக் கொடுக்கக் கூடிய விஷயம் அல்லவா! காங்கிரஸ் மகாசபையின், காந்தி மகானின் கட்டளைகளைச் சிரமேற்கொண்டு சுதந்திரப் போராட்டத்தில், தியாகத்தில் இந்தியாவில் உள்ள எல்லா மாகாணங்களுக்கும் வழிகாட்டியாக நின்று முதல் ஸ்தானம் வகித்த தமிழ் நாட்டில் காங்கிரஸ் மகாசபையின் வைர விழா நடைபெறப் போவது முற்றிலும் பொருத்தமான காரியம் அல்லவா!

ஆவடியில் நடைபெறப்போகும் காங்கிரஸ் மகா சபையின் வைர விழாவுக்கு லட்சக்கணக்கான மக்கள் விஜயம் செய்து அதை அமோக வெற்றி பெறச் செய்வார்களாக.

அட்டைப்பட விளக்கம்

# ஆதித் தாய் தந்தை

**வா**னத்தின் கீழ்த் திசையிலே பலபலவென்று செங்கிரணங்களை வீசி ஜோதி வடிவாய்க் கதிரவன் உதயமாகிறான்.

அதை அறிந்த மாத்திரத்தில் பூமித்தாய் புத்துணர்ச்சி கொள்ளுகிறாள்.

இருள் போர்வையை விட்டெறிகிறாள். பட்சி ஜாலங்கள் சிறகடித்துப் பறக்கின்றன. பாடும் பறவைகள் பாடிக் களிக்கின்றன. பச்சைப் பயிர்களும் மரம், செடி, கொடிகளும் சலசலக்கின்றன. மனித வர்க்கமும் துயில் விட்டு எழுகின்றது.

இதைப் பார்க்கும்போது பூமா தேவிக்கும் பரிதி வானவனுக்கும் இடையேயுள்ள காதல் எவ்வளவு ஆழ்ந்தது என்று எண்ணி வியக்காமலிருக்க முடியவில்லை. இதையே மகாகவி பாரதியார் பின்வருமாறு பாடுகிறார்:

காதல் கொண்டனை போலும் மண்மீதே
கண் பிறழ்வின்றி நோக்குகின்றாயே!
மாதர்ப் பூமியும் நின்மிசைக் காதல்
மண்டினாள் இதில் ஐயமொன் றில்லை;
சோதி கண்டு முகத்தில் இவட்கே
தோன்றுகின்ற புதுநகை என்னே!
ஆதித்தாய் தந்தை நீவிர் உமக்கே
ஆயிரம் தரம் அஞ்சலி செய்வேன்!

இவ்வார அட்டைச் சித்திரத்தில் உதய சூரியனையும், பூமித் தாயையும், மகாகவி பாரதியாரையும் நமது சைத்ரிகர் 'மணியம்' திறம்படச் சித்திரித்திருக்கிறார்.

# அமர தாரா




## மூன்றும் அத்தியாயம்
## "அவர் எங்கே?"

**எ**ன்னை வளர்த்த தந்தை மந்திர மூர்த்தி சிறந்த கல்வி அறிவு வாய்ந்தவர். தமிழிலும் ஆங்கிலத்திலும் சமய சம்பந்தமான பல நூல்களை ஆராய்ந்து படித்து உணர்ந்தவர். ஸ்ரீ ராமகிருஷ்ண பரம ஹம்ஸர், சுவாமி விவேகானந்தர் இவர்களுடைய திருவாக்குகள் அடங்கிய பல ஆங்கில நூல்கள் வைத்திருந்தார். தமிழ்ப் பெரியோர்களிலே தாயுமான சுவாமிகளிடத்திலும் இராமலிங்க சுவாமிகளிடத்திலும் அவருக்குப் பக்தி அதிகம். அவர்களுடைய பாடல்களை அடிக்கடி பாடுவார். முக்கியமாக,

"எல்லாம் உன் அடிமையே
எல்லாம் உன் உடைமையே
எல்லாம் உன்னுடைய செயலே!"

என்னும் வரிகளை அடிக்கடி அவர் பாடக் கேட்டிருக்கிறேன்.

இறைவன் வகுத்தபடியே இவ்வுலகிலே எல்லாக் காரியங்களும் நடக்கின்றனவென்றும், அவனன்றி ஓரணுவும் அசையாது என்றும் உறுதியாக நம்பினார். ஆதலின், கடவுளைப் பிரார்த்திப்பதிலேகூட "எனக்கு இம்மாதிரி கருணை செய்; இந்த பாக்கியத்தைக் கொடு!" என்று கேட்பது அறியாமை யென்று சொல்வார். நமக்கு எந்த விதத்தில் அருள் புரிய வேண்டும் என்பது, எல்லாம் அறிந்த ஆண்டவனுக்குத் தெரியாதா? நாம் சொல்லித்தான் அவ

ருக்குத் தெரிய வேண்டுமா? கஷ்டமோ, சுகமோ, துன்பமோ, இன்பமோ எது வந்தாலும் கடவுளுடைய சித்தம் என்று நம்பி அநுபவிக்க வேண்டும். இந்த நம்பிக்கை ஒருவருக்கு இருக்குமானால், அதிர்ஷ்டம் வரும் போது அடக்கத்துடன் அநுபவிக்கலாம்; துர்ப்பாக்கியம் நேரும்போது அதைப் பொறுமையுடன் சகித்துக் கொள்ளும் சக்தி உண்டாகும். கடவுளைப் பிரார்த்திப்பது ஏதோ ஒரு லாபத்தை நாடி அல்ல. ஆலயத்துக்குப் போவது ஆண்டவனிடம் வரம் வேண்டுவதற்காக அல்ல. "ஈசனே! உன் சித்தம் எதுவோ அதுவே என் பாக்கியம்!" என்பதுதான் உண்மையான பிரார்த்தனை. இறைவனை எண்ணும்போது மனத்தில் உண்டாகும் அமைதியே பிரார்த்தனையின் பெரும் பயன்.

இப்படி யெல்லாம் பல தடவை என் தந்தை எனக்குச் சொல்லி யிருக்கிறார். அதன் காரணமாகவே இன்று எனக்கு நேர்ந்துள்ள இன்னல்களைச் சகிக்கக் கூடியவளா யிருக்கிறேன்.

இறைவன் அருளைப் பற்றி இவ்வளவு மனத்தெளிவு பெற்றவரான என் தந்தை அன்றைக்கு ஒருநாள் ஒரு நொடிப் பொழுதில் தமது திடமான கொள்கைகளை யெல்லாம் காற்றிலே பறக்க விட்டு விடும்படி நேர்ந்தது.

"இந்து! உன் தாயாரை என்றைக்குப் பார்த்தேனோ, அன்றைக்கே என்னை அஞ்ஞானம் வந்து சூழ்ந்து கொண்டது. மோட்டார் பஸ் விபத்தில் எனக்கு அருகில் உன் அன்னை விழுந்து கிடந்ததைக் கண்டதும், அவளுடைய உயிரை எப்படியாவது காப்பாற்றித் தரும்படி ஆண்டவனைப் பிரார்த்தித்தேன். 'சற்று முன்னால் அவ்வளவு சந்தோஷமாக இருந்த தம்பதிகளுக்கு இந்த விபத்தில் தீங்கு நேராமலிருக்க வேண்டும்' என்று எல்லாத் தெய்வங்களையும் வேண்டினேன். அன்றிரவெல்லாம் பிரார்த்தனை செய்வதும், வேண்டுதல் செய்வதுமாகவே இருந்தேன். குங்குமத்துறைக் கோயிலில் வீற்றிருக்கும் குங்கும நாயகி அம்மனுக்கும் அருவிக்கரை விநாயகருக்கும் திருப்பதி வேங்கடாசலபதிக்கும் பழனி ஆண்டவருக்கும் திருச்செந்தூர் முருகனுக்கும் இன்னும் எனக்குத் தெரிந்த கோயில்களில் உள்ள எல்லாத் தெய்வங்களுக்கும், உன் அம்மா மட்டும் உயிரோடு பிழைத்தெழுந்தால் அபிஷேக ஆராதனைகள் செய்வதாக வேண்டிக் கொண்டேன்; உண்டியில் பணம் போடுவதாக வேண்டிக் கொண்டேன்; காவடி எடுப்பதாக வேண்டிக் கொண்டேன். பின்னால் அவ்வளவு வேண்டுதல்களையும் நிறைவேற்றி வைத்தேன்!" என்று என் தந்தை பல முறை என்னிடம் சொல்லியதுண்டு. மேலும் அன்று நடந்த நிகழ்ச்சிகளை அவர் சொன்னபடியே ஞாபகப் படுத்திக்கொண்டு இங்கே எழுதுகிறேன்.

* * *

தம் அருகில் உயிரற்றவள் போலக் கிடந்த பெண்ணைக் கண்டதும் மந்திரமூர்த்தி தமக்கு ஏற்பட்ட அதிர்ச்சியை அடியோடு மறந்து குதித்து எழுந்தார். தம்முடைய உடம்பில் ஏதாவது காயம் பட்டிருக்கிறதா என்பதைப் பற்றி அவர் ஒரு கணமும் சிந்திக்க வில்லை. தம்மைப் பற்றிய நினைவே அவருக்கு இல்லாமற் போய் விட்டது. சற்று முன்னால் பஸ்ஸில் தாம் பார்த்துப் பார்த்து அதிசயப் பட்டுக் கொண்டிருந்த இளந் தம்பதிகளுக்கு அபாயம் இல்லாமலிருக்க வேண்டுமே என்ற கவலைதான் மேலிட்டிருந்தது. அதிலும், தம் அருகில் கிடந்த அப் பெண்ணைப் பற்றி அவர் உள்ளம் திடுக்கிட்டுப் பதைபதைத்தது. அந்த கைய சந்தர்ப்பத்தில் என்ன செய்வது என்றும் அவரால் நிச்சயிக்க முடியவில்லை. கண்கள் மூடியிருந்த முகத்தைக் குனிந்து பார்த்துக் கொண்டு நின்றார். அவளுடைய தோள்களைப் பிடித்து மோட்டார் பஸ்ஸின் அடியிலிருந்து வெளியில் இழுக்கலாமா என்று யோசித்தார். முதலில், அவள் உடம்பில் உயிர் இருக்கிறதா என்று நிச்சயமாய்த் தெரிந்து கொள்ள விரும்பினார். அதை எப்படி அறிந்து கொள்வது என்பதற்கும் வழி தெரிய வில்லை. மூக்கின் அருகில் விரலை வைத்து மூச்சு வருகிறதா என்று பார்க்கலாமா என்று எண்ணினார். அச்சமயம் யாரோ ஒருவர் அவரைப் பின்னாலிருந்து ஒரு தள்ளுத் தள்ளி விட்டு முன் வந்தார். "ஏனையா மரம் போல் நிற்கிறீர்? இது என்ன வேடிக்கையா?" என்று இரைந்து கொண்டே அம்மனிதர் கீழே குனிந்து அப் பெண்ணைப் பிடித்துத் தூக்க முயன்றார். அவர்தான் அந்தப் பெண்ணின் நாயகர் என்பதை மந்திரமூர்த்தி அறிந்து கொண்டு சும்மா இருந்தார். அவளுடைய கால்கள் பஸ்ஸின் அடியில் மாட்டிக் கொண்டிருந்ததைக் கவனித்த அந்த இளைஞர் உடனே அவளை விட்டு விட்டு, தம்முடைய பலத்தை யெல்லாம் பிரயோகித்து அவள் மீது விழுந்திருந்த பஸ்ஸின் கூரைச்




சட்டத்தைத் தூக்கினார். "இது என்ன, வீமசேனன் வேலையாக வல்லவா இருக்கிறது!" என்று மந்திரமூர்த்தி ஆச்சரியப்பட்டுக் கொண்டிருக்கும் போதே, அந்த இளைஞர், "இன்னமும் சும்மா நிற்கிறீரே! கொஞ்சம் உதவி செய்யக் கூடாதா?" என்றார். மந்திரமூர்த்தி அவரண்டை போய்த் தாமும் பஸ் சட்டத்தைத் தூக்கிப் பிடிக்க எண்ணினார்.

"வேண்டாம்! எனக்கு வேண்டாம் உதவி! அவளை எடுத்து விடுங்கள்! சீக்கிரம்! சீக்கிரம்!" என்று கதறினார் அந்த இளைஞர்.

அப்போதுதான் மந்திரமூர்த்திக்குத் தாம் என்ன செய்ய வேண்டும் என்பது தெரிந்தது; தைரியமும் பிறந்தது.

அந்தப் பெண்மணியின் தோள்களைப் பிடித்து பஸ்ஸின் அடியிலிருந்து அவளுடைய தேகம் முழுதும் வெளியில் வரும்படி இழுத்தார். அதே சமயத்தில் அவள் உடம்பில் உயிர் இருக்கிறது என்பதும் அவருக்குத் தெரிந்தது.

அப்புறம் என்ன செய்வதென்பதைப் பற்றி மறுபடியும் அவருக்குச் சந்தேகம் வந்து விட்டது.

சாலைக்குப் பக்கத்திலே ஒரு பழைய காலத்துச் சத்திரம் இருந்தது. அவளைத் தூக்கிக் கொண்டு போய் அந்தச் சத்திரத்தில் படுக்க வைக்கலாம் என்று தோன்றியது. படுக்க வைத்து முகத்தில் ஜலம் தெளித்து மூர்ச்சை தெளியப் பண்ணலாம். ஆனால் அவ்வளவு வயது வந்த ஒரு பெண்ணை அவர் தூக்கிக் கொண்டு போகலாமா? பார்க்கிறவர்கள் என்ன நினைப்பார்கள்? அவளுடைய கணவன் தான் என்ன எண்ணுவான்?...

இதற்குள் அந்த இளைஞனே வந்து விட்டான். தூக்கி யிருந்த பஸ்ஸின் அடியில் கிடந்த இன்னொருவரை வெளியில் இழுத்து விட்ட பிறகு, அவன் விரைந்து வந்தான். "என்ன, ஐயா! மரமாட்டமா நிற்கிறீர்? கொஞ்சம் விலகும்!" என்று சொல்லிக் கொண்டே அவரை அப்பால் தள்ளிவிட்டுக் குனிந்தான். தரையில் மூர்ச்சையாகிக் கிடந்தவளை இரண்டு கைகளையும் முதுகின் அடியில் கொடுத்துத் தூக்கி எடுத்துக் கொண்டான். ஏதோ ஒரு சிறிய பூனைக் குட்டியைத் தூக்குவது போல் இலேசாகத் தூக்கிக் கொண்டு சத்திரத்தை நோக்கி நடந்தான். சத்திரத்தின் திண்ணையில் கொண்டு போய் மெதுவாக இறக்கி விட்டான். திடீரென்று அவனுக்கு ஒரு சந்தேகம் வந்து விட்டது. அப்பெண்ணின் நெஞ்சைத் தொட்டுப் பார்த்தான்! உள்ளங் கைகளையும் உள்ளங் கால்களையும் தொட்டுப் பார்த்தான்.

"ஐயோ! சந்திரமணி! என்னைக் கை விட்டுப் போய் விட்டாயா? இதற்குத் தானா உன்னை அழைத்து வந்தேன்? யமனுக்குப் பலி கொடுக்கவா அழைத்து வந்தேன்? எருமை மாட்டின் மேலேறி வந்த யமன் உனக்குத்தானா வந்தான்? ஐயோ! பாவி யமன் எனக்கு வந்திருக்கக் கூடாதா?" என்று கூறித் திண்ணைச் சுவரில் தன் தலையை மோதிக் கொள்ளத் தொடங்கினான்.

அந்த இளைஞனைப் பின்தொடர்ந்து வந்திருந்த மந்திரமூர்த்தியினால் அவனுடைய துயரத்தைப் பார்க்கச் சகிக்க வில்லை. அப்படி அவன் கதறி அழுது தலையைச் சுவரில் மோதிக் கொண்டிருந்ததை அவரால் பொறுக்க முடியவில்லை.

"தம்பி! வேண்டாம்! இது என்ன பைத்தியக்காரத்தனம்? உன் மனைவி இறந்து விடவில்லை. ஏன் அப்படிச் சந்தேகப் படுகிறாய்? மூச்சு விடுகிறாளே, தெரியவில்லையா?" என்றார்.

இளைஞன் தலையை மோதிக் கொள்வதையும் அலறி அழுவதையும் நிறுத்திச் சந்திரமணியை உற்றுப்பார்த்தான். உண்மையாகவே அவள் மூச்சு விட்டுக் கொண்டிருக்கிறாள் என்பதை அறிந்தான்.

"கொஞ்சம் தண்ணீர்! சீக்கிரம் கொஞ்சம் தண்ணீர் கொண்டு வாருங்கள்!" என்றான்.

அந்தச் சமயம் சத்திரத்துக் குள்ளேயிருந்து ஒரு மூதாட்டி வந்து கொண்டிருந்தாள். வாசற்படி யண்டை வந்தவள், "இதோ தண்ணீர் கொண்டு வருகிறேன்!" என்று சொல்லிவிட்டு உள்ளே போனாள்.

"ஐயா! ஒரு விசிறி கிடைத்தால் எடுத்து வாருங்கள்!" என்றான் அவ் விளைஞன்.

"ஆகட்டும்!" என்று கூறி விட்டு மந்திரமூர்த்தியும் உள்ளே சென்றார்.

அதற்குள் அவன் மறுபடியும் சந்திரமணியைத் தூக்கிக் கொண்டு சத்திரத்துக்குள்ளேயே வந்து விட்டான். சத்திரத்தின் கூடத்தில் அவளைப் படுக்க வைத்தான்.

விசிறி தேடி எடுத்துக்கொண்டு மந்திரமூர்த்தி வந்தார். கிழவி தண்ணீர் கொண்டு வந்தாள்.

"ஐயா! எனக்குத் தைரியம் சொல்லுங்கள். இவள் உயிருக்கு ஒன்றும் அபாயம் இல்லையே!" என்று கேட்டான்.

"நிச்சயமாக இல்லை, தம்பி! இவள் உடம்பில் ஒரு இரத்தக் காயம் கூடப் படவில்லை. கடவுள் அருளால் பிழைப்பாள். சற்று நேரத்துக் கெல்லாம் தூங்கி எழுவது போல் எழுந்திருப்பாள், பார்!" என்றார் மந்திரமூர்த்தி.

"அப்படியானால் சற்று இவளைத் தாங்களே பார்த்துக் கொள்ளுங்கள்! நான் போய் வேறு யாருக்காவது உதவி தேவையா என்று பார்த்து விட்டு வருகிறேன்!" என்று சொல்லி விட்டு அவன் வெளியே ஓடினான்.

மந்திரமூர்த்தி கிழவி கொண்டு வந்த தண்ணீரை மூர்ச்சையுற்றுக் கிடந்தவளின் முகத்தில் தெளித்து, அவளுக்கு விசிறியினால் விசிறிக் கொண்டிருந்தார்.

அதே சமயத்தில் வெளியில் என்ன நடக்கிறது என்பதையும் சற்றே கவனித்துக் கொண்டிருந்தார். அங்கிருந்து சத்திரத்து வாசற்படி வழியாகப் பார்த்தால், மரத்தடியில் பஸ் விழுந்து கிடந்ததும், அங்கே நடந்த காரியங்களும் ஒருவாறு தெரிந்தன.

ஓடிச் சென்ற இளைஞர் பஸ்ஸின் அடியில் அகப்பட்டுக் கொண்டிருந்த இன்னும் சிலரையும் வெளியில் எடுத்து விட்டுக் கொண்டிருந்ததை மந்திரமூர்த்தி பார்த்தார். அவருடைய ஊக்கமும் சுறுசுறுப்பும் பிறருக்கு உதவி செய்வதில் ஆர்வமும் மந்திரமூர்த்திக்கு வியப்பை அளித்தன. அதைக் காட்டிலும் அவ்விளைஞருடைய உடல் வலிமை மிகவும் ஆச்சரியத்தை



அளித்தது. "வீமசேனன், கடோத்கசன் வமிசத்தைச் சேர்ந்தவராக வல்லவா இருக்கிறார்!" என்று எண்ணினார். சந்திரமணிக்கு விசிறிக் கொண்டே, ஒரு நிமிடம் அவளுக்கு மூர்ச்சை தெளி கிறதா என்று பார்ப்பதும், மறு நிமிடம் வெளியில் நடைபெறும் காரியங்களைப் பார்ப்பதுமாக இருந்தார்.

முனகல் சத்தம் கேட்டுச் சந்திர மணியை உற்றுப் பார்த்தார். அவளு டைய கண்ணிமைகள் அசையத் தொடங் கின. இன்னும் கொஞ்சம் தண்ணீர் வாங்கி அவள் முகத்தில் தெளித்தார்.

சற்று நேரத்துக்கெல்லாம் சந்திர மணி நன்றாகக் கண்களைத் திறந்து பார்த் தாள். மந்திர மூர்த்தியின் முகத்தை யும், சத்திரத்து மூதாட்டியின் முகத் தையும் மாறி மாறிப் பார்த்தாள்.

"ஐயோ! நான் எங்கே இருக் கிறேன்? நீங்கள் யார்? அவர் எங்கே? காசிலிங்கம் எங்கே? அவருக்கு ஏதா வது......!" என்று சொல்லி விம்மினாள்.

"இல்லை, அம்மா, இல்லை! உன் கண வரைப் பற்றித்தானே கேட்கிறாய்? அவர் பெயர் காசிலிங்கமா? அவருக்கு ஆபத்து ஒன்றுமில்லை. ஆபத்துக்கு உள்ளானவர்களுக்கு உதவி செய்து கொண்டிருக்கிறார்! இதோ வந்து விடு வார்!" என்றார் மந்திர மூர்த்தி.

"என்ன ஆபத்து? என்ன நேர்ந்தது? நான் எப்படி இங்கே வந்தேன்? தாங்கள் யார்? பார்த்த முகமா யிருக்கிறதே!..."

"மோட்டார் பஸ்ஸில் உங்களுக்கு எதிரே நான் உட்கார்ந்து கொண்டு வந் தேன். மோட்டார் பஸ் மரத்தில் மோதிக் கவிழ்ந்து விட்டது!..."

"ஆமாம்; இப்போது ஞாபகம் வரு கிறது. ஐயோ! அவர் எங்கே? நீங்கள் என்னிடம் மறைக்கப் பார்க்கிறீர்கள். அவருடைய உயிருக்கு ..."

"அபாயம் ஒன்றுமில்லை. வீணாகக் கவலைப் படாதே, அம்மா! இதோ உன் கணவர் வந்து விடுவார்!"

"அவரை உடனே நான் பார்க்க வேண்டும். என்னை விட்டு ஏன் அவர் போனார்? அவருக்கு ஏதோ நேர்ந்து விட்டது! நீங்கள் மறைக்கப் பார்க் கிறீர்கள். உண்மையைச் சொல்லி விடுங்கள்! ஐயோ! அவருக்கு என்ன நேர்ந்தது?"

இவ்விதம் தீனமான குரலில் சொல் லிக் கொண்டே, படுத்திருந்த சந்திரமணி எழுந்திருப்பதற்கு முயன்றாள்.

"வேண்டாம், அம்மா! சற்றுப் படுத்திரு! நானே அவரைக் கூப்பிடு கிறேன். இதோ வந்து விடுகிறார், பார்!"

இவ்வாறு மந்திரமூர்த்தி சொல்லி இரண்டு கைகளையும் பலமாகத் தட்டி, "காசிலிங்கம்! காசிலிங்கம்!" என்று உரத்த குரலில் கூப்பிட்டார்.

"இதோ திரும்பிப் பார்க்கிறார்! வந்து விடுவார்! கொஞ்சம் தண்ணீர் குடி, அம்மா!" என்றார் மந்திரமூர்த்தி.

"வேண்டாம், வேண்டாம்! அவரைக் கூப்பிடுங்கள்! அவரை உடனே எனக் குப் பார்க்க வேண்டும். அவர் வந்த பிறகு தான்......அவருக்கு ஒன்றும் நேர வில்லையென்று தெரிந்த பிறகுதான்...... ஐயா! நிச்சயமாக அவருக்குக் காயம் ஒன்றும் படவில்லையே?"

"இல்லை, தாயே, இல்லை! இதோ அவரே வந்து விட்டார், பார்! ஓடியல் லவா வருகிறார்?" என்றார் மந்திரமூர்த்தி.

கணவன் மனைவி என்றால் இப்படி யல்லவா இருக்கவேண்டும் என்று மந்திர மூர்த்தி மனதிற்குள் எண்ணிக் கொண் டார். 'பதி பக்தி என்றால், இது வல் லவா உண்மையான பதி பக்தி?' என் றும் நினைத்து வியந்தார்.

காசிலிங்கம் ஓடி வந்து சந்திரமணி யின் அருகில் உட்கார்ந்தார்.

"விழிப்பு வந்துவிட்டதா, சந்திரமணி! நன்றாக மூச்சுவிட முடிகிறதா? உடம் பில் நோவு ஒன்றுமில்லையே?" என்று கேட்டார்.

"எனக்கு ஒன்றுமில்லை. உங்களுக்கு?" என்றாள் சந்திரமணி.

"எனக்கா? எனக்கு ஏன் காயம் படுகிறது? பஸ் விழுந்தபோது என்னைத் தூக்கி எறிந்தது அல்லவா? நான் விழுந்த இடத்தில் சாலை ஒரு முழம் பள்ளமாய்ப் போய் விட்டது!" என்று கூறிக் காசிலிங்கம் சிரித்தார்.

இதைக் கேட்ட சந்திரமணியின் முக மும் மலர்ந்தது.

ஆனால் திடீரென்று அவள் காசிலிங் கத்தை உற்றுப் பார்த்து, "ஐயோ! நீங்கள் பொய் சொல்கிறீர்கள்! உங்கள் வேஷ்டியில் இரத்தக் கறை இருக் கிறதே!" என்றாள்.

"அதுவா? காயம் பட்டவர்களைத் தூக்கி எடுத்தபோது ஏற்பட்ட இரத் தக் கறை! என் உடம்பில் ஒரு சிறு காயம்கூட இல்லை, சந்திரமணி! உன்னு டைய பிரியமே எனக்கு இரும்புக் கவச மாக இருக்கிறதே? காயம் எப்படிப் படும்? நான் வேணுமானால் சட்டை

துணிமணிகளை யெல்லாம் கழற்றிப் போட்டு விட்டுக் காட்டட்டுமா?'' என்றார் காசிலிங்கம்.

சந்திரமணி கூச்சத்துடன் ''வேண்டாம்! நீங்கள் 'காயம் இல்லை' என்று சொன்னால் போதும்!'' என்றாள்.

''தம்பி! கொஞ்சம் தண்ணீர் குடிக்கச் சொல்லுங்கள். உங்களைப் பார்க்காமல் தண்ணீர் குடிக்கக் கூட மறுத்து விட்டாள்!'' என்றார் மந்திரமூர்த்தி.

''இவள் அப்படித்தான்; ரொம்பப்பிடிவாதக்காரப்பெண்!''என்றார்காசிலிங்கம்.

நன்றாகத் தரையில் உட்கார்ந்து கொண்டு, சந்திரமணியின் தலையைத் தூக்கித் தன் மடியின் மீது வைத்துக் கொண்டார். ''எங்கே? தண்ணீரை இப்படிக் கொடுங்கள்!'' என்று சத்திரத்து அம்மாளைக் கேட்டார்.

தண்ணீர்ப் பாத்திரத்தை வாங்கிச் சந்திரமணியை வாயைத் திறக்கச் சொல்லிக் கொஞ்சம் கொஞ்சமாக விட்டார். சந்திரமணியும் காசிலிங்கத்தின் முகத்தைப் பார்த்துக் கொண்டே அவர் கொடுத்த தண்ணீரைக் குடித்தாள்.

## நான்காம் அத்தியாயம்

# அன்றிரவு

காசிலிங்கம் சந்திரமணியின் தலையை மடியிலிருந்து எடுத்துத் தரையில் வைத்து விட்டு, ''நான் போய் யாருக்காவது இன்னும் ஏதாவது உதவி செய்ய முடியுமா என்று பார்த்து விட்டு வருகிறேன். சற்றுப் பேசாமல் படுத்திரு! அலட்டிக் கொள்ளாதே!'' என்றார்.

''ஐயோ? என்னை இங்கே தனியாக விட்டு விட்டா போகிறீர்கள்?'' என்றாள் சந்திரமணி.

''தனியாக விட்டுப் போகிறேனா? உன்னைப் பார்த்துக் கொள்ளத்தான் தெய்வம் மாதிரி இந்தப் பெரியவர் வந்திருக்கிறாரே? ஐயா! கொஞ்சம் இவளைப் பார்த்துக் கொள்கிறீர்களா? சீக்கிரத்தில் வந்து விடுகிறேன்.''

''ஆகா! அதற்கென்ன, பார்த்துக் கொள்கிறேன். ஆனாலும் இந்தப் பெண் தங்களை விட்டுப் பிரிந்து இருப்பது...''

''அப்படிப் பிரியாமலே எப்போதும் இருக்க முடியுமா? அங்கே, பாவம், ஒரு மனிதன் இறந்தே போய் விட்டான்! எருமையின் பேரில் சாக்ஷாத் யமதர்மராஜனே வந்திருக்க வேண்டும். ஒரு சாவோடு போக வேண்டுமே என்றுதான் கவலையாயிருக்கிறது. இன்னும் இரண்டு பேர் குற்றுயிராகக் கிடக்கிறார்கள். நாம் மூன்று பேரும் ரொம்பக் கொடுத்து வைத்தவர்கள். ஒரு காயங்கூடப் படாமல் தப்பித்துக் கொண்டோம். சந்திரமணி! இதோ போய்ப் பார்த்து விட்டு ஐந்து நிமிஷத்தில் வந்து விடுகிறேன்!'' என்று சொல்லிக் கொண்டே காசிலிங்கம் அங்கிருந்து வெளியேறினார்.

''அவருக்கு இரும்பு நெஞ்சு; என்னை இப்படி விட்டு விட்டுப் போகிறார், பாருங்கள்!'' என்றாள் சந்திரமணி.

''உன்னைத் திண்ணையில் கொண்டு போய்ப் போட்டதும், நீ இறந்து விட்டாய் என்று எண்ணி, அவர் சுவரில் முட்டிக் கொண்டதைப் பார்த்திருந்தாயானால், இவ்விதம் சொல்ல மாட்டாய், அம்மா! பஸ் விபத்தில் காயம் படாமல் தப்பிவிட்டு, சுவரில் மோதிக் கொண்டு உயிரை விட்டு விடுவாரோ என்று பயந்து போனேன்!'' என்றார் மந்திரமூர்த்தி.

''ஐயோ! அப்படியா செய்தார்? மண்டையில் உண்மையாகவே அவருக்குக் காயம் பட்டு விட்டதோ, என்னமோ?'' என்றாள் சந்திரமணி.

பிறகு மந்திரமூர்த்தியைப் பார்த்து, ''என்னால் தங்களுக்கும் கஷ்டந்தான். எல்லாருக்கும் கஷ்டம் தருவதற்காகவே நான் பெண் பிறந்தேன்'' என்றாள்.

மந்திரமூர்த்தியின் உள்ளம் மேலும் உருகி விட்டது. ''அப்படி எண்ணாதே, அம்மா! ஒருவருக்கொருவர் உதவி செய்வதற்கில்லையென்றால், வேறு எதற்காகத்தான் இப்பூவுலகில் மனிதப் பிறவி எடுத்திருக்கிறோம்!'' என்றார்.

சந்திரமணியையும் காசிலிங்கத்தையும் பற்றி மேலும் விசாரித்துத் தெரிந்து கொள்ள விரும்பினார். அவர்களுக்கு எந்த ஊர், எப்போது கலியாணம் ஆயிற்று, எங்கே பிரயாணம் கிளம்பினார்கள் என்றெல்லாம் அறிய விரும்பினார். ஆனால், கேட்பதற்கு வேண்டிய தைரியமில்லை. மற்றவர்களைப் பற்றி விசாரிப்பது போல் தாராளமாகக் கேட்பதற்கு ஏதனாலோ அவருக்குத் தயக்கம் உண்டாயிற்று.

இதற்கிடையில் சந்திரமணி முனகத் தொடங்கியிருந்தாள். உடம்பில் ஏதோ வேதனை இருந்தது போல் தோன்றியது.

"எங்கேயாவது வலிக்கிறதா, அம்மா, ஊமைக் காயமாகப் பட்டிருக்கிறதோ, என்னமோ?" என்றார்.

"வலது முழங்காலுக்குக் கீழே தொட்டுப் பாருங்கள்!" என்றாள் சந்திரமணி.

மந்திரமூர்த்தி அவள் குறிப்பிட்ட இடத்தில் தொட்டதும் அவள் 'வில்' என்று கத்தினாள்.

"ஐயோ! கால் எலும்பு முறிந்து விட்டதோ, என்னமோ?" என்று மந்திரமூர்த்தி அங்கலாய்த்தார்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை; அவரிடம் மட்டும் சொல்லி விடாதீர்கள், ஐயா!" என்றாள் சந்திரமணி.

இப்படிக் கொஞ்ச நேரம் சென்றது. வாசலில் ஏக சத்தமும் ரகளையுமாக இருந்தது. பின்னால் வந்த பஸ்களில், விழுந்த பஸ்ஸிலிருந்த பிரயாணிகளை ஏற்றிக்கொண்டு போனார்கள்.

எல்லாரும் போன பிறகு, காசிலிங்கம் சத்திரத்துக்கு வந்தார். நடந்து வரும் போதே கையில் ஒரு சிறிய டைரியை விரித்துப் படித்துக் கொண்டு வந்தார். வீட்டுக்குள் வந்ததும், டைரியை மூடிச் சட்டைப் பைக்குள் ஜாக்கிரதையாகப் போட்டுக் கொண்டார். அவர் முகம் சிறிது மாறுபட்டிருப்பதை மந்திரமூர்த்தி கவனித்தார். அது அவ்வளவு முக்கியமான காரியமாக அச்சமயம் அவருக்குத் தோன்றவில்லை.

காசிலிங்கத்தைப் பார்த்து மந்திரமூர்த்தி "எல்லாரும் போய் விட்டார்களா?" என்று கேட்டார்.

"எல்லாரும் போய் விட்டார்கள்! யமனுலகம் போனவனின் உடம்பையும் சேர்த்துக் கொண்டு போய் விட்டார்கள். நாம் மூன்று பேருந்தான் பாக்கி!" என்றார் காசிலிங்கம்.



மறுபடியும் மந்திரமூர்த்தியை ஒரு மாதிரி உற்றுப் பார்த்து விட்டு, "தங்களுக்கு எத்தனை வேலையோ, என்னமோ? எங்களால் தாங்களும் இங்கே தங்கும்படி நேர்ந்து விட்டது. இனிமேல் பஸ் கிடையாதாம். கடைசி பஸ் போய் விட்டது! தங்களுக்கு எந்த ஊர், ஐயா?" என்று கேட்டார்.

மந்திரமூர்த்தி தாம் குங்குமத்துறைப் பண்ணையார் என்று தெரிவித்து விட்டு, "எனக்கு அப்படி ஒன்றும் அவசர ஜோலி இல்லை! காலையில் போனால் போகிறது. இங்கிருந்து எங்கள் ஊர் பதினைந்து மைல்; நடந்து போக முடியாது! ஒருவேளை பக்கத்தில் எங்கேயாவது மாட்டு வண்டி கிடைக்குமா என்று பார்க்கலாம்!" என்றார். அவர் அன்றிரவு அந்தச் சத்திரத்தில் தங்குவது அந்த இளம் தம்பதிகளுக்கு ஒருவேளை பிடிக்காமலிருக்கலாம் என்று எண்ணி அவ்விதம் சொன்னார்.

ஆனால் காசிலிங்கம் வேறு விதமாகப் பேசினார்.

"நன்றாயிருக்கிறது, ஐயா! மாட்டு வண்டி கிடைத்தாலும் தாங்கள் போகக் கூடாது. இன்று ஒரு இரவு எங்களுக்காக இங்கே இருந்தே தீரவேண்டும். உங்களுடைய உதவியில்லாவிட்டால், நானும் இவளும் ரொம்பக் கஷ்டப்பட்டுப் போயிருப்போம்!" என்றார்.

"நான் என்ன உதவி செய்து விட்டேன்? ஒன்றுமில்லை! வெறுமனே பார்த்துக் கொண்டு நின்றேன்!"

"நல்ல வார்த்தையாக 'அபாயமில்லை; பிழைத்துக் கொள்வாள்!' என்று சொன்னீர்கள் அல்லவா? அதுவே பெரிய உதவி. இந்தக் காலத்தில் அவ்வளவு உதவி செய்யத்தான் யார் இருக்கிறார்கள்? யாருக்காவது ஒரு கஷ்டம் நேர்ந்து விட்டால் அவர்கள் தலையில் ஒரு கல்லைத் தூக்கிப் போடத்தான் முன் வருகிறார்கள்!"

"நீங்கள் இன்று செய்த உதவியை என்றும் நாங்கள் மறக்க முடியாது!" என்றாள் சந்திரமணி.

இருவரும் மாற்றி மாற்றிப் பண்ணையாருக்கு வந்தனம் சொல்லிக் கொண்டிருந்தபோது, சத்திரத்து அம்மாள் வந்து "இலை போடலாமா? ஏதோ என்னாலானதைச் செய்திருக்கிறேன். என் மகனும் மருமகளும் ஒரு கலியாணத்துக்குப் போயிருக்கிறார்கள். ஒண்டிக்காரியாயிருக்கிறேன். அதனால் வற்றல் குழம்பும்

கத்திரிக்காய்ப் பொறியலும் மட்டுந்தான் செய்ய முடிந்தது! உங்களுக்கு ஒரு வேளை வற்றல் குழம்பு பிடிக்காதோ. என்னமோ?'' என்றாள்.

காசிலிங்கம் அந்த அம்மாளைப் பார்த்து ''நல்ல வார்த்தை சொன்னீர்கள்! வற்றல் குழம்பு பிடிக்காதோ என்று சந்தேகமா? தேவலோகத்திலிருந்து கொண்டு வந்த தேவாமிர்தத்தை ஒரு சட்டியிலும் வற்றல் குழம்பை ஒரு சட்டியிலும் வைத்துக் கொண்டு, 'எது வேண்டும்?' என்று என்னைக் கேட்டால், வற்றல் குழம்பு தான் வேண்டும் என்பேன். வற்றல் குழம்புக்குச் சமானம் உலகத்தில் வேறு என்ன இருக்கிறது?'' என்றார்.

இவ்வாறு காசிலிங்கம் உற்சாகமாகப் பேசியது குங்குமத்துறை மந்திர மூர்த்திக்கு மகிழ்ச்சி அளித்தது.

இருவரும் சாப்பிட உட்கார்ந்தார்கள். சந்திரமணியையும் அழைத்த போது அவள் மறுத்து விட்டாள். ''எனக்கு இன்னும் மயக்கம் நன்றாய்த் தெளிய வில்லை. பசியே கிடையாது. சாப்பிட்டால் கட்டாயம் உடம்புக்கு ஆகாது. மன்னித்து விடுங்கள்!'' என்றாள்.

''அப்படியானால் கொஞ்சம் பாலாவது சாப்பிடு, அம்மா! வீட்டில் பசு இருக்கிறது!'' என்றாள் சத்திரத்து அம்மாள்.

காசிலிங்கம் நன்றாகச் சாப்பிட்டார். வடித்திருந்த அன்னம், வற்றல் குழம்பு, கத்திரிக்காய்ப் பொறியல், — எல்லாம் தீர்ந்து விட்டன. கடைசியில் சட்டிகளைச் சுரண்ட வேண்டியதாகி விட்டது.

காசிலிங்கம் இதைத் தெரிந்துகொண்டு, ''போதும்! போதும்! இவருடன் பேசிக் கொண்டே அதிகமாகச் சாப்பிட்டு விட்டேன். இராத்திரி வயிற்று வலியால் திண்டாடப் போகிறேன்!'' என்றார்.

மந்திரமூர்த்தி தமக்குள்ளே சிரித்துக் கொண்டார். சந்திரமணியும் சாப்பிட வந்திருந்தால், காசிலிங்கத்துக்கு அரை வயிறுகூட நிரம்பியிராது.

போஜனம் முடிந்த பிறகு சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு மந்திரமூர்த்தி வாசல் திண்ணையில் படுத்துக் கொள்ளப் போவதாகச் சொல்லிக் கொண்டு கிளம்பினார்.

''திண்ணைக்கு எதற்காகப் போக வேண்டும்? இங்கேயே படுத்துக் கொள்ளலாமே?'' என்றார் காசிலிங்கம்.

''இல்லை, இல்லை! எனக்கு நல்ல காற்று வேண்டும். அப்போதுதான் தூக்கம் வரும். நீங்கள் இருவருங்கூட இரவில் நிம்மதியாகத் தூங்குங்கள்!''



என்றார் மந்திரமூர்த்தி. சொல்லியவாறே வாசல் திண்ணைக்குச் சென்று அங்க வஸ்திரத்தை விரித்துப் போட்டுப் படுத்தார். திண்ணையில் நல்ல வேளையாக மாப்பிள்ளைத் தலைகாணியும் இருந்தது.

காற்று நன்றாக வந்தது. மரங்களின் சலசல சத்தத்துடன் சிறிது நேரம் காற்று அடித்துக் கொண்டிருந்தால் மந்திரமூர்த்திக்கு நன்றாகத் தூக்கம் வந்து விடுவது வழக்கம்.

ஆனால் அன்றிரவு அவருக்குத் தூக்கம் வரவே இல்லை.

சத்திரத்துக்கு உள்ளேயிருந்து சந்திரமணியின் முனகல் கேட்டுக் கொண்டேயிருந்தது. பாவம்! அவளுக்கு உள்ளூறக் காயம் பட்டிருக்க வேண்டும் என்று எண்ணினார். அவளுக்கு அபாயம் ஒன்றுமில்லாமல் உடம்பு குணமாகி விட வேண்டுமென்று எல்லாம் வல்ல இறைவனை வேண்டினார். அத்துடன் திருப்தி அடையாமல், சக்தியுள்ள தெய்வங்கள் என்று அவர் கேள்வியுற்றிருந்த எல்லா ஆலயங்களின் தெய்வங்களுக்கும் வேண்டுதல்கள் செய்து கொண்டார்.

முன் பின் பார்த்திராத அந்தப் பெண்ணின் மீது தமக்கு ஏன் அவ்வளவு அபிமானம் உண்டாக வேண்டுமென்று எண்ணி அதிசயப் பட்டார். முற் பிறவிகளின் தொந்தமாக இருக்கக் கூடும் என்று தீர்மானித்தார். ஏகாங்கியான தம்முடைய நிலைமை அவருக்கு அடிக்கடி நினைவுக்கு வந்தது. இந்த இளந் தம்பதிகள் எந்த ஊர், எங்கே போகிறார்கள், அந்தப் பிள்ளைக்கு என்ன வேலை என்பதை

யெல்லாம் தாம் கேட்கத் தயங்கியது பற்றி நினைத்தார். காலையில் கட்டாயம் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று தீர்மானித்தார்.

சந்திரமணியின் முனகலுடன் காசி லிங்கம் அன்பான ஆறுதல் மொழி கூறும் குரலும் கேட்டுக் கொண்டிருந் தது. அவன் தணிந்த குரலில் பேசியதால், என்ன சொல்லுகிறான் என்பது விவர மாகக் கேட்க வில்லை. அது கேட்க வேண்டிய அவசியந்தான் என்ன? மன மொத்து நேசம் வைத்து மணந்து கொண்டவர்கள் இப்படி யெல்லாம் நடந்து கொள்வது இயற்கைதானே? தம்முடைய இல்வாழ்க்கையில் இப்படிப் பட்ட அநுபவம் ஒன்றும் இல்லையே என்று மந்திரமூர்த்தி அடிக்கடி நினைத் துக் கொண்டார். இனிமேல் அவ்விதம் நேருவதற்குச் சந்தர்ப்பமும் கிடையாது.

சற்று நேரம் சந்திரமணியின் முன கலும் காசிலிங்கத்தின் மொண மொணப் பும் நின்றிருந்தன. கடைசியாகத் தூங்கி விட்டார்கள் போலிருக்கிறது என்று மந்திரமூர்த்தி எண்ணினார். திடீரென்று காசிலிங்கத்தின் குரல் கேட்டது; உரத் துப் பயங்கரமாகக் கேட்டது.

"கொலைகாரப் பயல்கள்!"

"சதிகாரப் பயல்கள்!"

"என்னிடமா அவர்களுடைய கை வரிசையைக் காட்டப் பார்த்தார்கள்?"

சத்திரத்தின் வாசற் கதவைச் சாத்தித் தாளிடும்படி பண்ணையார் சொல்லிவிட்டு வந்தார். ஆனால் கதவு தாளிடப்பட வில்லை. காற்று வேகமாக அடித்தபோது கதவு சிறிது திறப்பதும் மறுபடியும் சாத்திக் கொள்வதுமாக இருந்தது.

பண்ணையார் திண்ணையிலிருந்து நடையில் இறங்கி, சிறிது திறந்திருந்த கதவின் வழியாக எட்டிப் பார்த்தார்.

உள்ளே சுவரின் மாடப் பிறையில் விளக்கு ஒன்று முணுக்கு, முணுக்கு என்று எரிந்து கொண்டிருந்தது. அதன் வெளிச்சத்தில் 'டைரி' போல் தோன்றிய ஒரு சிறிய புத்தகத்தைப் பிரித்து வைத் துக் கொண்டு காசிலிங்கம் படித்துக் கொண்டிருந்தார். அவர் முகத்தில் குரோதம் தாண்டவமாடியது.

மந்திரமூர்த்தி பயந்தே போனார். மறு படியும் திண்ணையில் ஏறிப் படுத்தார்.

சற்று நேரத்துக்கெல்லாம் சந்திரமணி யும் காசிலிங்கமும் பேசிக் கொள்ளும் குரல்கள் கேட்டன. இந்தத் தடவை அவர்கள் சற்று இரைந்தே பேசினார்கள்.

"என்ன? என்ன? அந்த டைரியில் என்ன எழுதியிருக்கிறது?" என்று சந்திரமணி கேட்டாள்.

காசிலிங்கம் கேலியும் குரோதமும் கலந்த சிரிப்புச் சிரித்து விட்டு, "கொலை காரப் பயல்கள்! நம்மைத் தேடிப் பிடித் துத் தொடர்வதற்கு ஒரு ஆளை அனுப்பி யிருக்கிறார்கள்! அவன் நாம் வந்த பஸ்ஸி லேயே வந்திருக்கிறான்! அவனுடைய துணிச்சலைப் பார்! நம்மைத் திருச்சியில் கண்டு பிடித்து, அப்புறம் ஊர் ஊராகத் தொடர்ந்து வந்தது எல்லாவற்றையும் டைரியில் எழுதியிருக்கிறான்! திருட்டுப் படவாப் பயல்!..."

மந்திரமூர்த்தி நடுநடுங்கிப் போனார். ஒரு வேளை தம்மைப் பற்றித்தான் அப் படி அந்த இளைஞன் தவறாக எண்ணிக் கொண்டிருக்கிறானோ என்று எண்ணிப் பதைபதைத்தார். தாம் டைரியே வைத் துக் கொள்ளவில்லை. ஆனால் யாருடைய டைரியையோ தம்முடையது என்று அவன் தவறாக எண்ணிக் கொண்டிருக்க லாம் அல்லவா? தம்மிடம் அவன் வந்து கேட்டால் 'என்னுடைய டைரி இல்லை' 'நான் உங்களைத் தொடர்ந்து வரவும் இல்லை' என்று நிரூபிப்பது எப்படி? அந்தப் பையனோ ரொம்ப முன்கோபக் காரனாயிருக்கிறான்!

நல்ல வேளையாக அவருடைய பயம் விரைவிலேயே தீர்ந்து விட்டது.

"திருச்சியிலிருந்தா நம்மைத் தொடர்ந்து வந்திருக்கிறான்? நமக்குத் தெரியவே இல்லையே? அது யாராயிருக் கும்?" என்று சந்திரமணி கேட்டாள்.

"எனக்கு மட்டும் கொஞ்சம் சந்தேகம் தட்டியது, சந்திரமணி! ஆனால் உன் னிடம் சொல்லிப் பயப்படுத்த நான் விரும்பவில்லை. அவர்களுடைய சூழ்ச்சி என்ன தெரியுமா? என்னைப் போலீஸ் ஸ்டேஷனில் அடைத்துப் போட்டு விட்டு உன்னைத் திரும்ப அழைத்துக் கொண்டு போய் விடுவதாம்! அறியாப் பெண்ணா கிய உன்னை ஆசை வார்த்தை சொல்லிக் கடத்திக்கொண்டுவந்து விட்டதாக என் பேரில் குற்றம் சாட்டுவதாம்! நீ போட் டுக் கொண்டிருக்கும் நகைகளுக்காக உன்னை நான் கொண்டு வந்து விட்டே னாம்! எப்படியிருக்கிறது, சந்திரமணி?"

"அவர்கள் இப்படி ஏதாவது சொல் வார்கள் என்று நாம் எதிர் பார்த்தது தானே? நான் உங்களுடன் என் மன தாரப் புறப்பட்டு வந்தேன் என்று எந்தக் கோர்ட்டிலும் சத்தியம் செய்து சொல்ல நான் தயாராயிருக்கிறேன். நீங்கள்


CR.46.TAMIL
சிறுவர்கள் சக்தியை
சீக்கிரமே செலவு
செய்கிருர்கள்
அவர்கள்
புத்துணர்ச்சியைப் பெற
ஒரு தேக்கரண்டி க்ளுகோவிடா கொடுங்கள்.
Glucovita
GLUCOSE-D
உங்கள் குழந்தையின் ஒழுங்கான வளர்ச்சிக்கு அவன் வேலையிலும், விளையாட்டிலும் செலவு செய்யும் சக்தியைத் திரும்பிப்பெற வேண்டும். அதற்காக அவன் ஒவ்வொரு தடவையும் பால் அல்லது பழ ரஸம் அருந்தும் பொழுது அத்துடன் ஒரு தேக்கரண்டி க்ளுகோவிடா சேர்த்துக் கொடுக்கவும். க்ளுகோவிடாவில் அடங்கியுள்ள டெக்ஸ்ட்ரோஸ், கால்ஷியம், பாஸ்பரஸ், விடமின் டி முதலான பொருள்கள் அவனுடைய சக்திக்கும், வளர்ச்சிக்கும் மிகவும் அவசியம்.
க்ளுகோவிடா
உடலுக்குகந்த உணவு
காரன் ப்ராடக்டஸ் கம்பெனி (இந்தியா) லிமிடெட்.
தபால் பெட்டி. நெ. 994, பம்பாய் 1   தபால் பெட்டி. நெ. 982, கல்கத்தா 1




"சென்னை வாசகர்களின் சௌகரியத்தை உத்தேசித்து சுராஜ் ஏஜன்ஸியார் சில்லறை விற்பனை ஷோரூம் ஒன்றையும், 18, ராயப்பேட்டை ஹைரோடில் ஆரம்பித்திருக்கின்றனர்." டி. எஸ். ஆர். கம்பெனியார் தயாரிக்கும் சகலவிதமான பொருள்களும் அவ்விடம் கிடைக்கும்.



ஏன் வீணாக அலட்டிக் கொள்கிறீர்கள்? நகைகள் எல்லாம் என்னுடைய தாயார் எனக்குக் கொடுத்தவை!"

"நீ கோர்ட்டில் ஏறிச் சாட்சி சொல்லும் வரையில் நான் விட்டுவிடப் போகிறேனா? ஒருநாளுமில்லை, சந்திரமணி! என்னைப் போலீஸ் ஸ்டேஷனில் அடைத்து விடுவதாம்! அடைத்துப் பார்க்கட்டும்! என்னை அடைத்து வைக்க ஒரு போலீஸ் ஸ்டேஷன் இந்த நாட்டில் இருக்கிறதா? நம்முடைய கட்சியில் கடவுளே இருக்கிறார், சந்திரமணி! கடவுள் மட்டும் என்ன? யம தர்மராஜனே நம் கட்சியில் இருக்கிறான்! என்னைப் போலீஸ் ஸ்டேஷனில் பிடித்துக் கொடுக்க வந்தவனை யம தர்மராஜனே கொண்டு போய்விட்டான்! மோட்டார் விபத்தில் செத்தவன் அவன் ஒருவன் தான்! டிரைவர் கூட அநேகமாகப் பிழைத்துக் கொள்வான்! முன் பக்கம் டிரைவர் பக்கத்தில் உட்கார்ந்து ஊர் வம்பு பேசிக் கொண்டு வந்த பயல் மட்டுந்தான் அந்த இடத்திலேயே செத்துப் போனான். அவன் செத்து விழுந்து கிடந்த காட்சியை நீ பார்த்திருக்க வேண்டுமே?"

"நல்ல வேளை, நான் பார்க்கவில்லை! எதற்காக நான் பார்க்க வேண்டும்? நான் சொல்வதைக் கேளுங்கள். நாம் ஒருவருக்கும் கேடு நினைக்க வேண்டாம். நாம் ஒருவருக்கும் கெடுதல் செய்யவில்லை; நமக்கு ஏன் கெடுதல் வரப்போகிறது? ஒருவன் செத்துப் போய் அதனால் நமக்கு நன்மை வரவேண்டுமா?"

"அவன் செத்துப் போக வேண்டும் என்று நான் விரும்பினேனா? அவனைப் பற்றி எனக்குக் கொஞ்சம் சந்தேகம் இருந்ததே தவிர, நிச்சயமாகக் கூடத் தெரியாதே? கடவுளே பார்த்து அவனைத் தண்டித்து விட்டார்! அவனுக்கு நீ இரக்கப்படுகிறாயா? என்னைப் போலீஸ்காரர்களிடம் பிடித்துக் கொடுத்து விட்டு உன்னைக் கொண்டு போவதற்காக வந்தவனிடம் இரக்கப்படுகிறாயா?"

இவ்விதம் சொல்லி விட்டுக் காசிலிங்கம் ஒரு பயங்கரச் சிரிப்புச் சிரித்தார்.

மறுபடியும், "என்னைப் போலீஸ் ஸ்டேஷனில் அடைத்து விடுவதாமே? அப்படி ஒரு போலீஸ் ஸ்டேஷன் இருக்கிறதா? என் பேரில் கை வைக்கக் கூடிய பயலும் இருக்கிறானா? அவனுக்குத் தலையில் கொம்பு முளைத்திருக்குமா? என் மேல் கை வைத்துப் பார்க்கட்டும்! அப்போது தெரியும்!" என்று காசிலிங்கம் கர்ஜனை செய்து விட்டுச் சிரித்தார்.

அந்தத் தம்பதிகளுக்குத் தம் பேரில் சந்தேகம் இல்லை யென்று தெரிந்ததும், மந்திரமூர்த்திக்குச் சிறிது மன நிம்மதி ஏற்பட்டது. அந்தத் தம்பதிகளைத் தொடர்ந்து அவர்களுக்குத் தொல்லை கொடுக்க வந்தவன் மோட்டார் விபத்தில் செத்துப் போனான் என்று அறிந்ததும் அவருக்கு ஒருவித மகிழ்ச்சி ஏற்பட்டது.

அப்புறம் தம் மனத்தைத் தாமே ஆராய்ந்து கொண்டார்! சீச்சீ! இது என்ன சந்தோஷம்! நம்முடைய அறிவு ஏன் இப்படிக் குழம்பி விட்டது? இவர்களுக்குக் கெடுதல் செய்ய எண்ணி வந்தவன், அதற்காகவா கடவுளால் தண்டிக்கப் பட்டான்? இந்த உலகத்தில் நல்லவர்களுந்தான் அற்பாயுளில் இறந்து போகிறார்கள்! பொல்லாத ராட்சத குணம் படைத்தவர்கள் நெடுங்காலம் இருக்கிறார்கள்! நல்லவனுக்கு உடனே நன்மை வருவதுமில்லை; கெட்டவனுக்கு உடனே கெடுதல் வருவதுமில்லை. உலக நியதியில் அப்படி உடனுக்குடன் நியாயம் பிறப்பதில்லை. செத்துப் போனவன் உண்மையில் கெட்டவன்தான் என்பது என்ன நிச்சயம்? அவன் வயிற்றுப் பிழைப்புக்காக இந்தக் காரியத்தில் தலையிட்டிருக்கலாம். அவன் இறந்து போனதினால் அவனுடைய பிள்ளை குட்டிகள் தவிக்கும்படி நேரிடலாம். அவன் இறந்தான் என்று கேட்டுத் தாம் சந்தோஷப் பட்டது எவ்வளவு பெரிய தவறு?......

இவ்வாறு சிறிது நேரம் சிந்தனை செய்து விட்டு மந்திரமூர்த்தி தம்மை அறியாமல் நித்திரையில் ஆழ்ந்தார்.

பொழுது புலரும் சமயத்தில் மலைச் சாரல்களில் கேட்கும் பட்சிகளின் சலசலப்பும் கலகலத்வனியும் அவரை உறக்கத்தினின்று எழுப்பின.

சத்திரத்துக்குள்ளே நிச்சப்தமாயிருந்தது. பாவம்! அவர்களும் கடைசியில் அசந்து தூங்குகிறார்கள் போலிருக்கிறது!

சத்திரத்து அம்மாள் கதவைத் திறந்து கொண்டு வாசல் மெழுகிக் கோலம் போடுவதற்காக வெளியில் வந்தாள்.

"அம்மா! காப்பிப் பொடி இருக்கிறதா? மூன்று பேருக்கும் காப்பி போட முடியுமா?" என்று மந்திரமூர்த்தி கேட்டார்.

"இருக்கிறது; இருக்கிறது! மாடு கறந்ததும் காப்பி போட்டுத் தருகிறேன்.

அவர்கள் இரண்டு பேரும் இராத்திரி யெல்லாம் தூங்காமல் பேசிக் கொண் டிருந்தார்கள். சண்டை போட்டார் களா, சமாதானமாகப் பேசினார்களா என்று கூடத் தெரியவில்லை. இப்போது தான் அசந்து தூங்குகிறார்கள்!''

''அவர்களை எழுப்ப வேண்டாம்; அவர்களாக எழுந்திருக்கட்டும்! சீக்கிரம் மாடு கறந்து காப்பி போடுங்கள்!'' என்று சொல்லி விட்டு மந்திரமூர்த்தி அந்த அம்மாளிடம் ஐந்து ரூபாய் நோட்டு ஒன்றைக் கொடுத்தார்.

''உங்களைப் போல் சிலர் இருப்பதால் தான் ஊரில் மழை பெய்கிறது!'' என் றாள் சத்திரத்து அம்மாள்.

சற்றுத் தூரத்தில் மலையிலிருந்து விழுந்த அருவி அந்தச் சத்திரத்துக்கு அருகில் சிறிய வாய்க்காலாக வளைந்து ஓடிக் கொண்டிருந்தது.

மந்திரமூர்த்தி அங்கே போனார். ஆல மரத்திலிருந்து ஆலம் விழுது பறித்துச் சாவகாசமாகப் பல் தேய்த்து முகம் கழுவிக் கொண்டு திரும்பி வந்தார்.

அப்போது சத்திரத்து வாசலில் காசி லிங்கம் நிற்பதைக் கண்டார்.

''ஐயா! கொஞ்சம் உள்ளே வாருங்கள்!'' என்றார் காசிலிங்கம்.

மந்திரமூர்த்தி உள்ளே சென்றார். சந்திரமணியும் விழித்துக் கொண்டு விட் டாள் என்பதைக் கண்டார். ஆனால் இன்னமும் அவள் படுத்துக் கொண்டு தானிருந்தாள்.

சந்திரமணி முகமலர்ச்சியுடன் மந்திர மூர்த்தியைப் பார்த்து, ''ஐயா! இரவு நன்றாய்த் தூங்கினீர்களா? அல்லது நாங்கள் தொண தொணவென்று பேசிக் கொண்டிருந்தபடியால், தூக்கம் பிடிக்க வில்லையா?'' என்று கேட்டாள்.

''காற்று சுகமாக வந்தது; நன்றாய்த் தூங்கி விட்டேன், அம்மா!'' என்றார்.

''ஐயா! இவளுடைய வலது முழங் காலுக்குக் கீழே தொட்டுப் பாருங்கள்!'' என்றார் காசிலிங்கம்.

அவர் காட்டிய இடத்தில் சிறிது வீங்கி யிருந்தது.

மந்திர மூர்த்தி மிக மெதுவாகத் தொட் டார். அதற்கே சந்திர மணியின் முகம் சுருங்கியது.

''இப்படிப் பூவைத் தொடுவதுபோல் தொடுகிறீர்களே?'' என்று காசிலிங்கம் கேட்டு விட்டு, காலில் வீங்கி யிருந்த இடத்தை நன்றாக அழுத்தினார்.

சந்திர மணி 'வீல்' என்று கத்தினாள். கண்களில் கண்ணீர் ததும்பியது.

''காலில் ஒன்றும் இல்லை; நீங்கள் அழுத்துவதுதான் வலிக்கிறது!'' என்றாள் சந்திரமணி.

''இவள் இப்படித்தான் சொல்வாள்! எனக்கு என்னமோ சந்தேகமா யிருக் கிறது, ஐயா! எலும்பு முறிந்திருக்குமோ என்று பயமா யிருக்கிறது. பக்கத்தில் எங்கேயாவது டாக்டர் இருக்கிறாரா? ஆயுர்வேத வைத்தியராவது கிடைப் பாரா?'' என்றார் காசிலிங்கம்.

''இங்கிருந்து மூன்று மைல் தூரத்தில் நயனபுரம் என்ற ஊரில் ஒரு டாக்டர் இருக்கிறார். நான் வேண்டுமானால் போய் அவரை அழைத்து வருகிறேன்!'' என் றார் மந்திர மூர்த்தி.

''அழைத்து வந்தால் ரொம்பப் புண்ணியமா யிருக்கும்!'' என்றார் காசிலிங்கம்.

''ஒன்றும் வேண்டாம். அவரை ஏன் தொந்தரவு செய்கிறீர்கள்? எனக்கு ஒன்றுமில்லை!'' என்றாள் சந்திரமணி.

''ஒன்றுமில்லை யென்றால், நல்லதாய்ப் போயிற்று. எதற்கும் டாக்டரைக் கொண்டு பரிசோதித்து விடுவது நல் லது!'' என்றார் மந்திரமூர்த்தி.

இதற்குள் சத்திரத்து அம்மாள் காப்பி போட்டுக் கொண்டு வந்தாள். மூன்று பேரும் சாப்பிட்டார்கள்.

பிறகு மந்திரமூர்த்தி டாக்டரை அழைத்துக் கொண்டு சீக்கிரம் வந்து விடுவதாகச் சொல்லிவிட்டுப் போனார்.

போகும்போது மூன்று மைலும் நடந்துதான் போனார். இந்தமாதிரி ஒரு காரியத்தில் தாம் ஈடுபட்டிருப்பதை நினைத்து நினைத்து ஆச்சரியப்பட்டுக் கொண்டு போனார்.

நயனபுரத்தில் ஒரு குதிரை வண்டி பிடித்தார். டாக்டருக்கு நல்ல வார்த்தை சொல்லி, நிறையப் பணம் கொடுப்பதாக வும் சொல்லி, வண்டியில் ஏற்றிக் கொண்டு காலை சுமார் ஒன்பது மணிக் குச் சத்திரத்துக்கு வந்து சேர்ந்தார்.

காசிலிங்கம், சந்திரமணி இருவரையும் சத்திரத்தில் காணவில்லை!

அவ்வழியே முதலில் வந்த மோட்டார் பஸ்ஸில் ஏறிக் கொண்டு அவர்கள் போய் விட்டார்கள் என்று சத்திரத்து அம்மாள் சொன்னாள்.

மந்திரமூர்த்தி சத்திரத்து வாசலில் திகைத்துப் போய் நின்றார்! (தொடரும்)

# பத்ம விபூஷணம்

★ ● ★

செப்டம்பர் முதல் தேதி விநாயக சதுர்த்தி அன்று மயிலாப்பூர் ரஸிக ரஞ்சனி சபையில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் சங்கீதக் கச்சேரி ஒரு விசேஷமான விழாவைப் போல் குதூகலமான ரஸிகர் மகாசபையின் முன்னிலையில் நடைபெற்றது. மேற்படி சபையின் தலைவரான ஸுப்ரீம் கோர்ட் நீதிபதி ஸ்ரீ டி. எல். வெங்கட்ராம அய்யர், உதவித் தலைவர் ஸ்ரீ கே. ராஜா வய்யர், "ஹிந்து" ஆசிரியர் ஸ்ரீ கே. சீனிவாசன், "சுதேசமித்திரன்" ஆசிரியர் ஸ்ரீ ஸி. ஆர். சீனிவாஸன், மந்திரிகள் ஸ்ரீ எம். பக்தவத்ஸலம், ஸ்ரீ ஸி. சுப்பிரமணியம், ஸ்ரீ தேவதாஸ் காந்தி, ஸ்ரீமதி தேவதாஸ் காந்தி, ராஜாஜி, ஸ்ரீ கே. வி. கிருஷ்ண சாமி ஐயர், ஸ்ரீ கே. பாலசுப்பிரமணிய ஐயர் எம். எல். ஸி. முதலிய பிரமுகர்களுடன் சென்னையிலுள்ள சங்கீத ரஸிகர்கள் பலரும் இக்கச்சேரிக்கு விஜயம் செய்திருந்தார்கள்.

"பத்ம விபூஷணம்" என்னும் கௌரவத்தை இந்திய ஜனாதிபதி ஆகஸ்டு 15ம் தேதி சுதந்திர தினத்தை யொட்டி ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மிக்கு அளித்ததற்காக அவரைப் பாராட்டுவதற்கு இச் சந்தர்ப்பத்தை ரஸிக ரஞ்சனி சபையார் பயன்படுத்திக் கொண்டார்கள்.

அன்று கச்சேரி அமோகமாக அமைந்திருந்தது. கல்யாணி, பிலஹரி, பைரவி, சங்கராபரணம், தோடி ஆகிய ராக ஆலாபனைகள் புதிய கற்பனைகளுடனும் ஜீவகளையுடனும் விளங்கின. "கொலுவை யுன்னாடே" "ஸ்ரீரங்க புரவிஹாரா" கீர்த்தனங்கள் தனிச் சிறப்புடன் சோபித்தன.

இந்தக் கச்சேரியின் முடிவுக் கட்டத்தில் நீதிபதி ஸ்ரீ டி. எல். வெங்கட்ராமய்யர் அவர்கள் "பத்ம விபூஷணம்" என்னும் சிறப்பை அடைந்த ஸ்ரீமதி எம். எஸ்.ஸுக்கு ஆசி கூறி வாழ்த்தினார். ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் இனிய சாரீரத்தின் சிறப்பு அனைவரும் அறிந்தது என்றும், அத்துடன் அவர் சங்கீத வித்தையை நன்கு பயின்று சிறந்த வித்வத்தை அடைந்திருப்பதால், விஸ்தாரமான ராக ஆலாபனைகளின் மூலமாகவே ரஸிகர்களின் உள்ளங்களைப் பரவசப் படுத்த இயலுகிறதென்றும், அவருக்கு இந்திய சர்க்கார் இந்தக் கௌரவத்தை அளித்தது தென்னாட்டுச் சங்கீதத்தையே கௌரவித்ததாகும் என்றும் கூறினார். அவருடைய சங்கீதக் கலையைப் பொதுநலக் காரியங்களுக்குப் பயன்படுத்தி வருவதைக் குறிப்பிட்டு அவர் நீடூழி வாழ்ந்து சங்கீதக் கலைக்கும் பொது நலத்துக்கும் சேவை செய்ய வேண்டும் என்று ஆசி கூறினார்.

ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மி அவர்களின் சார்பாகக் "கல்கி" ஆசிரியர் நன்றி கூறினார். தென்னாட்டில் சங்கீத வித்தையாகிற கடலைக் கரை கண்ட மகா வித்வான்கள் பலர் இருக்கிறார்கள் என்றும், ஆகையால் சுதந்திர பாரத சர்க்கார் தமக்கு இந்தக் கௌரவத்தை அளித்தது, பொது நலத்துக்காகத் தாம் செய்துள்ள சேவைக்காகவே இருக்க வேண்டு மென்று ஸ்ரீமதி எம். எஸ். கருதுவதாகவும் கூறினார். அவ்விதம் பொதுநல சேவைக்கு ஸ்ரீமதி எம். எஸ்.ஸின் சங்கீதம் பயன்படும்படி ஆரம்பத்தி லிருந்து ஊக்கம் அளித்து நடத்தி வைத்தவர் ஸ்ரீமதி எம். எஸ். ஸின் கணவரான ஸ்ரீ டி. சதாசிவம் ஆனபடியால், இந்தக் கௌரவம் அவருக்கே சேர வேண்டியது என்று ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி இந்த ரஸிகர் மகா சபையில் தெரிவித்துக் கொள்ள விரும்புவதாகக் குறிப்பிட்டார்.

சுமார் பத்து ஆண்டுகளுக்கு முன்பு அன்னை கஸ்தூரிபாய் காந்தி அமர நிலையை அடைந்த போது, அவருடைய ஞாபகார்த்தமாக மாதர் குலத் தொண்டுகள் செய்வதற் கென்று ஒரு கோடி ரூபாய் வசூலிக்கப்பட்டதையும், அதற்காக ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி ஐந்து உதவிக் கச்சேரிகள் நடத்தி அவற்றின் மூலம் ஒரு லட்சம் ரூபாய்க்கு மேல் தமிழகத்தில் சேர்ந்ததையும் கல்கி ஆசிரியர் ஞாபகப்படுத்தினார்

"பின்னர் ஸ்ரீமதி எம். எஸ். இலங்கையிலிருந்து லக்னௌ வரையில் பற்பல பொதுநலக் காரியங்களுக்குக் கச்சேரி செய்து உதவி யிருக்கிறார். ஐம்பதினாயிரம், லட்சம் என்று அக் கச்சேரிகளின் மூலம் நிதி சேர்க்கப்பட்டிருக்கிறது. கடைசியாகச் சென்ற வருஷத்தில் டில்லிமா நகரில் ஸ்ரீ ராம கிருஷ்ண மடத்தின் திருப்பணிக்காக நடத்திய உதவிக் கச்சேரியில் சுமார் லட்சம் ரூபாய் வசூலாயிற்று" என்று "கல்கி" ஆசிரியர் தெரிவித்து, இவ்வளவும் ஸ்ரீ சதாசிவம் அவர்கள் பொது நலத் தொண்டுகளில் கொண்டிருக்கும் ஆர்வத்தினாலேயே சாத்தியமாயின என்றும், ஆகையினால் சுதந்திர சர்க்கார் அளித்த கௌரவம் தமது கணவராகிய ஸ்ரீ சதாசிவத்துக்கே உரியது என்று ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி கருதுவது முறையானதே என்றும் கூறினார். இத்தகைய மகத்தான ரஸிக மகா சபையைக் கூட்டுவித்துக் கச்சேரியைச் சிறப்புறச் செய்த ரஸிக ரஞ்சனி சபையின் நிர்வாகிகளையும் "கல்கி" ஆசிரியர் பாராட்டினார்.

கச்சேரி இனிது முடிந்த பிறகு, ரஸிகர்களும் நண்பர்களும் பலர் மேடைக்கு வந்து ஸ்ரீமதி எம். எஸ். ஸுக்குத் தங்கள் பாராட்டுதல்களையும் வாழ்த்துக்களையும் தெரிவித்தார்கள்.

மேற்படி கச்சேரி நடந்தபோது ரஸிக ரஞ்சனி சபையின் தோற்றங்கள். சிலவற்றை எதிர்ப் பக்கத்தில் உள்ள படங்களில் காணலாம்.

---

பாரதி வாக்கு

மண்ணுலகத்துப் பொருளும் பெருமையும் மிக இழிவுடையனவாயினும் அவற்றைக் கூடச் சோம்பரால் துறந்திருப்பவன் நற்கதி யடைய மாட்டான். உழைத்துத் தேடி அவற்றின் இயற்கையை அனுபவித்துப் பார்த்த பின்பு துறக்க வேண்டும். பாடுபட்டுத் தேடிப் பணத்தை அடைபவனைக் கவி நிந்தனை செய்யவில்லை. அதைப் போற்றுதற் குரியதோர் பெருமை யுடைய தென்று எண்ணிப் புதைத்து வைப்பவனையே நிந்தனை செய்கின்றார்.

—ஞானரதம்


3 வது
வெற்றிகரமான
வாரம்!
அருணா பிலிம்ஸ்
தூக்கு தூக்கி
டைரக்ஷன்...R.M. கிருஷ்ணசாமி
சென்னை
ஸ்ரீ கிருஷ்ணா
வெலிங்டன்
சயானி
மற்றும் தமிழ்நாடெங்கும்
தயாரிப்பு: அருணா பிலிம்ஸ் - சென்னை-17



# மறைந்த மாயம்!

குண்டுமணி

★ ★

அரசன் ரகுவீர வர்மன் அரண்மனை மேல் மாடத்திலிருந்து தடதட வென்று கீழே இறங்கினன்.

மாடிப் படியில் பாதி தூரம் இறங்கியதும் ஒரு படி காலியா யிருந்தது. அதிலிருக்கும் பணியாளைக் காண வில்லை. அரசன் வியப்போடு, "இந்த இருபதாவது படியில் நிற்க வேண்டிய பணியாள் எங்கே?" என்று வினவினன்.

"மறைந்து விட்டான், அரசே!" என்று பணிவுடன் பகர்ந்தான் ஒரு பணியாள்.

அரசன் தீவிரக் கவலையில் ஈடுபட்டு அந்தப்புரத்துக்குள் நுழைந்தான்.

"ராணி! அரண்மனையிலிருந்து நாலைந்து நாட்களாக ஒவ்வொரு பணியாளாக மறைந்து கொண்டு வருகின்றனர்" என்றான் அரசன் வருத்தத்துடன்.

"அவர்கள் தொலைந்து விட்டால் என்ன? நாம் வேறு பணியாட்களை அந்த இடத்தில் நியமித்து விட்டால் போயிற்று!" என்று சமாதானம் கூறினள் ராணி.

"ஆமாம்! இதென்ன புதிய கட்டில்? பழைய கட்டில் எங்கே போயிற்று?" என்று வினவினன் அரசன்.

"பழைய கட்டில்கள் துருப் பிடித்து விட்டன. ஆகையால் புதிய கட்டில்கள் விலைக்கு வாங்கினேன்" என்றாள் ராணி.

"இவ்வளவு பணம் செலவு செய்து இந்த அலங்காரப் பொருள்களை வாங்குவானேன்?" என்று கேட்டான் ரகுவீரவர்மன்.

"மன்னவா! நாளை நம் அரண்மனைக்கு விதேகபுரி இளவரசன் வருகிறான் அல்லவா? அவன் வந்து அரண்மனையைப் பார்த்தால் நன்றாயிருக்க வேண்டாமா?"

"ஆம்! நானும் அதை மறந்து விட்டேன். நல்ல வேளை ஞாபகப்படுத்தினய்!"

"இதோடு நம் குமாரியை மணக்கப் பல இளவரசர்கள் வந்து விட்டார்கள். அவர்களில் சிலரை ராஜகுமாரி தனக்குப் பிடிக்க வில்லை யென்று திருப்பி யனுப்பி விட்டாள். மற்றவர்களை நீங்கள் பரீட்சையில் தோல்வி யடைந்ததாகத் திருப்பி யனுப்பி விட்டீர்கள்!" என்றாள் ராணி.

"ஆமாம்! அதற்காக அழகற்றவனை மணந்து கொள்ளச் சொல்கிருயா அம்மா!" என்று கேட்டாள் ராஜகுமாரி.

"இல்லாவிட்டால் வீரமற்ற கோழையை நம் பெண்ணின் தலையில் கட்டச் சொல்கிருயா?" என்றான் ரகுவீர வர்மன்.

"இப்படி அனைவரையும் வேண்டாமென்று தள்ளினல் நம் பெண் கன்னியாகவே இருக்க வேண்டியதுதான். தயவு செய்து விதேகபுரி இளவரசனுக்கு நம் பெண்ணை மணம் செய்து வைத்து விடுங்கள்!" என்று அரசனிடம் கெஞ்சிக் கேட்டுக் கொண்டாள் ராணி.

"அதெல்லாம் கூடாது, அப்பா! நம் அரண்மனைக்கு வரும் விதேகபுரி இளவரசரை இந்த மறையும் மனிதர்களுக்குக் காரணம் கண்டு பிடிக்கச் சொன்னல் என்ன?" என்றாள் ராஜகுமாரி வனஜா.

"ஆம்! பேஷான யோசனை. அப்படியே செய்து விடலாம்!" என்று கூறி விட்டு ரகுவீர வர்மன் அங்கிருந்து தர்பார் மண்டபத்துக்கு விரைந்தான்.

அன்று விதேகபுரி இளவரசன் ராஜ மரியாதையோடு அரண்மனைக்கு அழைத்து வரப்பட்டான். அவனைப் பார்த்தவுடனே ராஜகுமாரி வனஜாவுக்கு மிகவும் பிடித்துப் போய் விட்டது.

விதேகபுரி இளவரசனை ஆசனத்தில் அமர்த்தி, "எங்கள் அரண்மனையில் பணியாட்கள் ஒவ்வொரு நாளும் ஒவ்வொருவராகக் காணமல் போய்க் கொண்டிருக்கின்றனர். அதற்குக் காரணம் கண்டு பிடித்து அவர்களையும் நீங்கள் மீட்டுத் தரவேண்டும்!" என்றான் ரகுவீர வர்மன்.

"ஆகட்டும்!" என்று சொல்லி விட்டுப் போனன் விதேகபுரி இளவரசன்.

சில நாட்கள் இளவரசன் அரண்மனையைச் சுற்றி வளையம் வந்தான், மனிதர்கள் மறையும் மர்மத்தைக் கண்டு பிடிக்க. அவன் முயற்சி பலிக்கவில்லை.

* * *

அன்று அந்தப்புரத்துக்குள் விருந்து தோட்டத்துக்குப் போக வந்த ராஜகுமாரி வனஜா ஒரு ஓரத்து அறையில் மாலதி நிற்பதைக் கண்டாள். அவள் கையில் ஏதோ விசித்திரப் பொருள் இருந்தது. அதைப் பார்த்ததும் ராஜகுமாரி மறைந்து நின்று கொண்டு அவள் செய்கையைக் கவனித்தாள். அரண்மனைச் சேவகன் ஒருவன் அங்கு வந்ததும் மாலதி அவனை மேஜையாக்கி வைத்து விட்டுத் திரும்புவதைக் கண்டாள்.

"உன் கையில் என்ன? நீதான் அந்த மந்திரக்காரி யென்று தெரிந்து விட்டது. உன்னுல்தான் அரண்மனையில் மனிதர்கள் மறைகிறார்கள் என்பதும் தெரிந்து விட்டது!" என்றாள் வனஜா கோபத்துடன்.

மாலதி அவள் காலில் விழுந்து, "ராஜகுமாரி, என்னை மன்னித்து விடு. எங்கள் குடும்பம் பெரியது. நாங்கள் ஏழை. ராணி 'புதிய கட்டில், நாற்காலி வேண்டியிருக்கிறது' என்று கூறி என்னிடம் பணம் கொடுத்தாள். அதையெல்லாம் என் குடும்பத்துக்குக் கொடுத்து விட்டேன்" என்றாள்.



"அப்படியானால் இந்த நாற்காலி எப்படி வந்தது?" என்று கேட்டாள் வனஜா.

"அரண்மனை மந்திரவாதி என்னைக் கல்யாணம் செய்து கொள்கிறேன் என்றார். அவர் மந்திரக் கயிற்றைத் தந்தால் அவரைக் கல்யாணம் செய்து கொள்கிறேன் என்றேன். அவர் அதைத் தந்தார்."

"அந்தக் கயிற்றினால் பழைய பொருள்களைப் புதியவன ஆக்கி விட்டாயா?"

"இல்லை, ராஜகுமாரி! அப்படிச் செய்யவில்லை. அரண்மனையிலுள்ள பணியாட்களையெல்லாம் மந்திரக் கயிற்றினால் நாற்காலி, கட்டிலாக்கி விட்டேன்!"

"ஆ, அப்படியா!" என்று வியந்தாள் ராஜகுமாரி வனஜா.

"என் தவறுக்கு மன்னித்து விடுங்கள்! நீங்கள் விரும்பினால் மந்திரக் கயிற்றினால் மறுபடியும் அரண்மனைச் சேவகர்களை வரவழைத்து விடுகிறேன்!" என்றாள் மாலதி.

"மன்னித்து விட்டேன்! ஆனால் எனக்கு ஒரு உதவி செய்ய வேண்டும்" என்று கூறி அவள் காதில் ஏதோ இரகசியமாகக் கூறினாள் ராஜகுமாரி வனஜா.

மாலதியும் தலையசைத்தாள்.

விதேகபுரி இளவரசன் அரண்மனைத் தோட்டத்தில் குறுக்கும் நெடுக்குமாக நடந்து கொண்டிருந்தான். மாலதி தயங்கியபடியே அவன் அருகில் சென்று மந்திரக் கயிற்றைக் கையில் கொடுத்தாள். அவன் காதில் ரகசியமாக ஏதோ கூறினாள். விதேகபுரி இளவரசன் மகிழ்ச்சியுடன் அதற்குத் தலையசைத்தான்.

மறுநாள் காலை அரண்மனையில் மந்திரக்கயிற்றுடன் விதேகபுரி இளவரசன் நுழைந்து ஏதோ முணுமுணுத்தான். அவ்வளவுதான்; அரண்மனையிலுள்ள நாற்காலி, மேஜை, கட்டில் எல்லாம் அரண்மனைப் பணியாட்களாக மாறின.

ரகுவீர வர்மனும், ராணியும் அந்த அதிசயத்தைக் கண்டு வியப்பில் ஆழ்ந்தனர்.

விதேகபுரி இளவரசன் அரசன் ரகுவீர வர்மனிடம், "அரசே! இந்த மந்திரக் கயிறு செய்த வித்தைதான் இத்தனை அமர்க்களத்துக்கும் காரணம்" என்றான்.

ரகுவீர வர்மனுக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. "பேஷ்! நான் வைத்த பரீட்சையில் ஜயித்து விட்டாய்...என் பெண் உனக்கேதான்!" என்று கூறி அவனை வாழ்த்தினான்.

விதேகபுரி இளவரசன் தனக்கு உதவி செய்த மாலதியை மனதார வாழ்த்தினான். ஆனால் மாலதியோ ராஜகுமாரி வனஜாவுக்கு நன்றி செலுத்தினாள். ராஜகுமாரி வனஜா தனக்கு அழகான கணவன் கிடைக்க வழிசெய்த மாலதியையே வாழ்த்தினாள். ஆனால் இதற்கெல்லாம் மூலகாரணமான மந்திரக்கயிற்றை அவர்கள் எல்லோரும் வாழ்த்த மறந்து விட்டார்கள்!

## ஒவ்வொரு கெஜம் பின்னித் துணியுடனும் — தர மேன்மையின் விசேஷ லாபம்!

பார்த்தவுடன் நல்ல துணியென்று தெரிகிறது.

ஒழுங்கான நெசவு, ஒரே சீரான நிறம், ரம்மியமான பளபளப்பு, அப்பட்டமான வேலைப்பாடு

தொட்டுப் பார்த்தாலும் நல்லதென்று தெரிகிறது.

அதன் நேர்த்தியான இழைகள் சௌகரியம் மற்றும் நீடித்த உழைப்பிற்கு உறுதி பளிக்கின்றன.

அதுமட்டுமல்ல—இத்துணியில் ஏதோ ஒரு அதிகப்படி விசேஷம் உண்டு.

இடைவிடாத ஆராய்ச்சியும் பரிபூரணச் சிறப்பின் நாட்டத்தில் விளைவும் காரணமாக பின்னித் துணிகள் எப்பொழுதுமே ஒருபடி உயர்வுதான்.

இத்தனிச் சிறப்பை நீங்கள் கண்களாலோ ஸ்பர்சத்தாலோ உணர முடியா

ஆனால் நீங்கள் வாங்கும் ஒவ்வொரு கெஜம் பின்னித் துணியிலும் தரமேன்மை எச் செலவுமின்றி உங்களுக்கு உபரியாகக் கிடைக்கிறது. துணியின் உபரிமதிப்பையே இழையோட்டி வழங்குகிறோம்.



### பின்னி தரத்திற்கு ஈடு இணை கிடையாது

தி பக்கிங்ஹாம் & கர்னாடிக் கம்பெனி லிட்., மதராஸ்

தி பெங்களூர் வுல்லன், காட்டன் & ஸில்க் மில்ஸ் கம்பெனி லிட்., பெங்களூர் 2

மானேஜிங் ஏஜன்டுகள்: பின்னி & கோ. (மதராஸ்) லிட்.

# யோகாசன சிகிச்சை



☆ வி.என். குமாரசாமி ☆

29. ஆஸ்துமாவுக்கு இரண்டாவது பயிற்சி

## பஸ்சிமோத்தானாசனம்

செய்யும் விதம் :—விரிப்பில் மல்லாந்து படுக்கவும். இரண்டு கால்களைச் சேர்த்தாற்போல் நீட்டி வைத்துக் கொள்ளவும். கைகள் இரண்டையும் காதுகளை ஒட்டினாற் போல் தலைக்கு மேல் நீட்டி வைத்துக் கொள்ளவும். கை விரல்கள் நீட்டிச் சேர்ந்திருக்க வேண்டும். வாய் மூடியிருக்க வேண்டும். முதல் சித்திரத்தைக் கவனியுங்கள். இது ஆரம்ப நிலை.

மூச்சை தீர்க்கமாய் நன்கு இழுத்துக் கொள்ளவும். உடலை நன்ருக விறைப்பாக வைத்துக் கொள்ளவும். கைகள் காதுகளை விட்டு விலகா வண்ணம் மூச்சை இழுத்து எழுந்து இரண்டாவது சித்திரத்திலுள்ளபடி உட்காரவும். இது முதல்படி.

உடனே மூச்சை விட்டபடியே முன்னுக்குக் குனிந்து கால்களின் கட்டை விரல்களை, ஆள் காட்டி விரலையும், நடு விரலையும் கொக்கி போல மடக்கிக் கொண்டு மூன்ருவது சித்திரத்திலுள்ள படி பிடித்துக் கொள்ளவும்.

இது இரண்டாவது படி.

பின் மூச்சை ஒரு தரம் இழுத்து விட்டவாறே இன்னும் கீழே குனிந்து, முழங்கைகளை வளைத்து நான்காவது சித்திரத்திலுள்ளபடி முழங் கை தரையில்பட, முகத்தை முழங்கால் சந்தில் வைக்கவும். இந்நிலையில் இருக்கும் போது மூச்சை சாதாரணமாய் விடவும் இழுக்கவும் செய்யலாம். இந் நிலையில் ஐந்து முதல் பத்து விநாடி வரை இருக்கவும். பிறகு நிமிர்ந்து மூன்ருவது சித்திர நிலைக்கு வந்து கைகளைக் கால்கள் பிடிப்பிலிருந்து எடுத்து, காதுகளை ஒட்டினாற் போல் கைகளை வளைத்து நிமிர்ந்து இரண்டாவது சித்திர நிலைக்கு வரவும். அவ்வாறே மெதுவாய்ப் பின்னுல் சாய்ந்து படுத்து முதல் சித்திரத்திலுள்ளபடி ஆரம்ப நிலைக்கு வரவும். தலையை நிமிர்ந்து கைகளை, கால்களை விட்டு எடுத்துப் படுக்கும் வரை சௌகரியப்படி மூச்சை விடலாம்.

இவ்வாறு செய்தால் ஒரு பஸ்சிமோத்தானாசனம் செய்த மாதிரி. அவசியமானுல் நான்கைந்து விநாடி இளைப்பாறி மீண்டும் மறு தடவை செய்யலாம். இம்மாதிரி மூன்று தடவை ஆரம்பத்திலும் பின் ஐந்து அல்லது ஆறு தடவை வரைக்கும் தொடர்ந்து செய்யலாம்.

சிலருக்கு முதல் படியாகிய படுத்து எழுந்திருப்பதற்குக் கஷ்டமாய் இருக்கும். கைகளை ஊன்றிக் கொண்டால்தான் எழுந்திருக்க முடியும். அப்படியும் சில நாட்கள் செய்து எழுந்திருக்கலாம். ஆனுல் கூடுமான வரை கைகளை ஊன்ருமலும் எழுந்திருக்கப் பல தடவை முயற்சி செய்ய வேண்டும். சிலருக்குக் காதுகளுடன் கைகளை ஒட்டினாற்போல் வைத்துக் கொண்டு எழுந்திருக்க முடியாது. கைகளை முன்னுக்கு வீசிக் கொண்டு வந்தால்தான் முடியும். அப்படியே சில நாட்கள் பழகி வந்தால் கைகள் காதுகளை ஒட்டினாற்

---

### பெயர் மாற்றம்

*சென்ற ஆகஸ்டு 29-ந் தேதி "கல்கி" இதழில் பிரசுரமாகியுள்ள 'வைராக்கியத்தின் விளைவு' என்ற போட்டிக் கதையை எழுதியவர் "சுகி" என்று தவருக வெளியாகியிருக்கிறது. அக் கதையை எழுதியவர் ஸ்ரீமதி எஸ். ஸ்வர்ணலதா பி. ஏ., இந்தத் தவறை எடுத்துக் காட்டி, கதை எழுதியவர் எழுதாதவர் இருவரும் நமக்குக் கடிதம் எழுதியிருக்கிருர்கள். இந்தப் பெயர் மாற்றம் நேர்ந்தது குறித்து வருந்துகிறேம்.*

## திறமைக்கு மதிப்புண்டா?

'கல்கி' ஆகஸ்டு பதினைந்தாம் தேதி இதழில் வெளியாகியிருக்கும் மாணவர் ஸ்ரீ ராமச்சந்திரனின் கடிதத்தை நான் மனப் பூர்வமாக வரவேற்கிறேன். காரணம் நானும் கிட்டத்தட்ட அதே காரணத்தால் பாதிக்கப்பட்டவன்.

நான் சென்னை கல்லூரிக்கு உரிய காலத்தில் பணத்தைச் செலுத்தி இடைக் கலை நிம் வகுப்பில் (ஜூனியர் இண்டரில்) சரித்திரப் பிரிவில் இடமளிக்கும்படி விண்ணப்பித்தேன். சில நாட்கள் கழித்துக் கல்லூரி அறிக்கைப் பலகை மூலமாக முடிவு தெரிவிக்கப்படும் எனக் கல்லூரி அலுவலாளர் தெரிவித்தார். அவ்வாறே நான் சில நாட்கள் கழித்துச் சென்று அறிக்கை பலகையினைப் பார்த்த பொழுது அதில் என் பெயர் காணப்படவில்லை. அதாவது அக்கல்லூரியில் எனக்கு இடமளிக்கப்படவில்லை. இத்தனைக்கும் எனது எஸ். எஸ். எல். ஸி. மார்க்குகள் எத்தனை தெரியுமா? ஆங்கிலம் 62, தாய்மொழி தமிழ் 63, விஞ்ஞானம் 62, கணிதம் 82, சமூக வரலாறு 71. இது கண்டு புண்ணாகக் கொதிக்கிறது என்னுடைய நெஞ்சம்.

அந்தக் கல்லூரியில் இடமளிக்கப்பட்டு இண்டரில் பயின்று வரும் மாணவர்கள் அனைவரும் சராசரி 63 சத விகிதத்துக்கு மேல் எஸ். எஸ். எல். ஸி.யில் மதிப்பெண் பெற்றவர்கள் என்று அக்கல்லூரி நிர்வாகிகள் கூற முடியுமா? பன்னிப் பன்னிப் பேசப்படுகின்ற தகுதிக்கும் திறமைக்கும் எங்கே மதிப்பு!

நாகூர்
16-8-54

கே. ராதாகிருஷ்ணன்

போல் வைத்து எழுந்திருக்கும் பழக்கம் உண்டாகி விடும். சிலருக்கு எழுந்திருக்கும் போது கால்கள் சற்று தூக்கும். கால்களை விறைப்பாய் வைத்துக் கொண்டால் தூக்காது. அப்படியும் முடியவில்லையானால் கனமான பீரோ அல்லது மேஜை அருகில் கால்களைக் கொடுத்து எழுந்திருக்கலாம். இலேசானதாய் இருந்தால் பீரோ அல்லது மேஜை செய்பவர்களின் மேலேயே விழுந்து காயப்படுத்தி விடும். அல்லது பிறரைக் கொண்டு காலைச் சற்று அழுத்திப் பிடிக்கச் சொல்லி எழுந்திருக்கலாம்.

அதிக வயதானவர்கள் நோயாளிகள் படுத்து எழுந்திருப்பது கஷ்டம். அவர்கள் முதல்படி செய்ய வேண்டிய அவசியமில்லை. இரண்டாவது படியிலிருந்தே உட்கார்ந்தபடி செய்யலாம். படுத்துச் செய்ய வேண்டுமென்பதில்லை.

இரண்டாவது படியாகிய கால் கட்டை விரலை ஒரு சிலரால் தவிர மற்றவர்களால் பிடிக்க வராது. மெதுவாய்ச் சிறுகச் சிறுக முயற்சி செய்ய வேண்டும். இன்றே செய்துவிட வேண்டுமென்று முரட்டுத்தனமாய்ப் பழகக் கூடாது. அப்படிச் செய்தால் மறு நாள் கால் நரம்புகள் வலியெடுத்துச் செய்ய முடியாமலே போய் விடும். ஒரே நாளில் சாதித்துப் பின் விட்டு விடுவதற்குப் பதில் மெதுவாகப் பயில்வது நல்லது.

சிலர் தனக்குக் கால் நீளம், கை குட்டை அதனால் எட்ட வரவில்லை என்று சொல்லுவார்கள். அப்படி யாருக்கும் இருப்பதாகத் தெரியவில்லை. எங்கோ அபூர்வப் பிறவியாகச் சிலர் இருக்கலாம். முதுகெலும்பு கட்டை பாய்ந்து வளையாமல் முரட்டு மூங்கிலைப்போல் இருப்பதால்தான் கால் எட்ட முடிவதில்லை. அப்பேர்ப்பட்டவர்கள் எட்ட முடிந்த அளவு பாதத்துக்கு மேல் பாகங்களைப் பிடித்துக் கொண்டு குனியலாம். ஆனால் ஒன்று மட்டும் நன்கு ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். முழங்கால்களை மடித்துக் கொண்டால் மிகச் சுலபமாகப் பிடிக்க வரும். அப்படிச் செய்வதனால் ஆசனப் பலன் குறையும். அதற்குப் பதில் முடிந்த அளவு, கட்டை விரலைப் பிடிக்க முடியாவிட்டாலும் கால்களைப் பிடித்துக் குனிந்து செய்யலாம்.

சிலருக்கு வயிறு பருத்திருப்பதனால் குனிந்து கால் விரலைத் தொட முடியாமல் வயிறு தடுக்கும். அவர்கள் தினமும் முயற்சி செய்வார்களானால் வயிறு குறையும். சௌகரியமானவர்கள் சலபாசனம், தனுராசனம் இவைகளைச் செய்து வயிற்றைச் சீக்கிரமாகக் குறைக்கலாம். ஆனால் ஆஸ்துமாக்காரர்கள் எல்லோராலும் மேற்படி ஆசனங்களைச் செய்ய முடியாது. இந்த ஆசனத்தையே முடிந்த அளவு மகிழ்ச்சியுடன் செய்தாலே பலன் உண்டு.

மூன்றாவது பாகமாகிய முகத்தை முழங்கால்களின் சந்தில் வைப்பது சற்று சிரமமானதுதான். இதற்கு முதுகெலும்பு இன்னும் இறக்கம் உள்ளவர்களால்தான் முடியும். சிறு வயதினர்களுக்கும், வாலிபர்களுக்கும் இதைச் செய்யச் சுலபமாய் வரும் என்று சொல்லலாம். ஆனால் எத்தனையோ பேர் பார்க்க ஒடிசலாய் இருப்பார்கள்; வயிறே இருக்காது. வாலிபர்களாகவும் இருப்பார்கள். ஆனால் அவர்களால் இரண்டாவது படியாகிய கால் கட்டை விரலையும் பிடிக்க வராது. பின் மூன்றாவது படி எங்கு செய்யப் போகிறார்கள்! காரணம் முதுகெலும்பு சிறு வயதிலேயே முற்றி விட்டிருப்பதேயாகும்.

இந்த மூன்றாவது படியை வெகு நிதானமாகப் பழக வேண்டும். கால்கள் விறைப்பாக வைத்து, முழங் கால்கள் மடியா வண்ணம் பார்த்துக் கொள்ள வேண்டும். குனிந்து முகம் முழங்கால்களுக்கு இடையே போகும் போது தொடை நரம்புகள் சுர் என்று வலிக்கும். அதிகம் வலிக்கும் அளவு செய்யக்கூடாது. லேசாய் வலிக்கும்போதே விட்டு விட்டு மறுபடி மறுபடி முயற்சி செய்ய வேண்டும். இவ்வாறே சில நாட்கள் செய்து வந்தால் தொடை முதுகு நரம்புகள், சதைக் கட்டுகள் இளகி நாளுக்கு நாள் நன்கு குனியவும் எட்டவும் மடிக்கவும் வரும்.

இந்த ஆசனம் ஆண்களைக் காட்டிலும் பெண்களுக்குச் சுலபமாய் வரும். ஆனால் ஆண்களைப் போல வீட்டு வேலைகளைச் செய்யாத பெண்களுக்கு வராது. குனிந்து நிமிர்ந்து வேலை செய்து பழக்கமான பெண்களுக்குச் சுலபமாய் வரும்.

பலன்கள்:—பஸ்சிமோத்தான என்றால் சமஸ்கிருதத்தில் முதுகை வளைப்பது என்பது பொருள். முதுகை வளைப்பதற்காகவே ஏற்பட்ட ஆசனம். எனவே முதுகு வழியாகச் செல்லும் நரம்புக் கூட்டங்களுக்குப் பயிற்சி அளிப்பதே இதன் முக்கிய நோக்கம். காலும் தலையும் ஒன்றாய்ச் சேருகின்றன. அப்பொழுது முதுகெலும்பு நரம்புகள் எவ்வளவு இழுக்கப்படுகிற தென்பதை அறியுங்கள். தவிர, தொடை சதைகள் நரம்புகளெல்லாம் இந்தப் பயிற்சியில் இளக்கம் அடைகின்றன. வயிற்றுச் சதைகள் முக்கியமாகப் பெருங்குடலின் ஆரம்ப இடம், கடைசி இடை, இவை நான்கும் நசுக்கப்படுகின்றன. எனவே இவைகளில் அடைபட்ட மலச் சிக்கல் விலகும். அத

னால் ஆஸ்துமாக்காரர்களுக்கு மலச்சிக்கலால் உண்டாகும் ஆஸ்துமா விலகும்.

தவிர, இந்த ஆசனம் செய்யும்போது உட்டியாண செய்யும்போது உண்டாகும் நிலை தன்னால் ஏற்படுகின்றது. அதாவது டயாப்ரம் மேல் எழும்பி நுரை ஈரலையும், இருதயத்தையும் அழுத்துகிறது. அப்பொழுது அவைகளும் சுறுசுறுப்படைகின்றன. வயிற்றை அழுத்துவதாலும் நன்கு குனிவதாலும் மூத்திரக் காய்களுக்கும் நல்ல பயிற்சி கிட்டுகிறது. அதன்மேல் இருக்கப்பட்ட அட்ரினேல் கோளங்களும் சுறுசுறுப்படைகிறது. அதனால், அது சரிவர இதுவரை வேலைசெய்யாமல் இருந்தாலும் இப் பயிற்சியினால் ஊக்கமடைந்து அதன் ரசம் சுரக்கும் வேலை நன்கு செய்யும். நமக்கு வேண்டியது அட்ரினேல் ஹார்மோன் தானே; அது இப் பயிற்சி மூலம் ஓரளவு கிடைக்கும். எனவே, இந்தப் பயிற்சியினால் உடல் பூராவுக்குமே ஒரு தெம்பு உண்டாக ஏதுவாகிறது.

யோக சாஸ்திரத்தில் இந்த ஆசனத்தைப் பற்றி மிகப் பிரமாதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த சக்தி லும்பர் பாகமாகிய முதுகெலும்பின் கடைசி பாகத்துக்குப் பயிற்சி ஏற்பட்டு அதிக இரத்தம் வருவதால் மூலாதாரத்தில் இருக்கக்கூடிய குண்டலினி சக்தி எழும்ப ஏதுவாய் இருக்கும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதை யோகிகள் மணிக் கணக்கில் செய்வார்கள்.

ஆனால் நாம் அவ்விதம் செய்யக் கூடாது. நாம் அந்த வழியில் பிரவேசிக்கவில்லை. வெறும் ஆரோக்கியத்துக்காகவும். பிணிகளை விலக்கவுமே இந்த ஆசனங்களை மேற்கொண்டுள்ளோம். எனவே, சாதகர்கள் ஒரு தடவை சில விநாடிகள் தான் செய்யலாம். அவ்வாறு செய்வதால் பல நன்மைகள் ஏற்படுகின்றன. முக்கியமாக ஆஸ்துமாக்காரர்களுக்கு அட்ரினேல் ஹார்மோன் சுரப்பும், நுரை ஈரல் அழுக்கமும் ஏற்படுகிறது. அட்ரினேல் ஹார்மோன் தான் இரத்த வேகத்தைத் தர வல்லது என்று முன்பு அறிந்தோம். அது சிறிதளவு இந்த ஆசனத்தில் கிட்டும்.

ஹார்மோன் தான் நிறையக் கிட்டுமே என்று அதிக நேரம் இந்த ஆசனத்தில் இருக்கக் கூடாது. அப்படி யிருந்தால் ஹார்மோன் என்னமோ கிடைக்கத்தான் செய்யும். ஆனால் மலச்சிக்கல் உண்டாகிவிடும். பல அன்பர்கள் ஆசனம் செய்ததால் மலச்சிக்கல் உண்டாகிவிடுகிறது என்கிறார்கள். அவர்கள் ஆசனங்களைத் தவறான முறையில் இந்த ஆசனம் அதிக நேரம் செய்வதால் தான் அப்படி ஏற்படுகிறது. நாம் குறிக்கும் அளவுபடி செய்தால் ஒன்றும் ஏற்படாது.

பெருங்குடலின் ஆரம்ப இடம், முடியும் இடம் இவைகள் தான் மலச் சிக்கலுக்குக் காரணமாய் இருந்தாலும், இந்த ஆசனத்தில் அவ்விடங்கள் நன்கு அமுக்கிக் கொண்டிருக்கும். பெருங்குடலில் எப்பொழுதும் ஒன்றுமில்லாமல் காலியாக இருக்காது. இந்த ஆசனம் செய்யும்போது அந்த இடங்களிலுள்ள மலம் வேறு இடங்களுக்குத் தள்ளப்படும். மற்ற இடங்களிலுள்ள குடல் சுவர்களும் சுறுசுறுப்படையும். ஆனால் நாம் அதிக நேரம் அவ்வாறே இந்த ஆசன நிலையில் இருந்தால் சுறுசுறுப்பான குடலின் சுவர்கள் மலத்திலுள்ள நிணங்களை யெல்லாம் உறிஞ்சி விடும். எனவே மலச்சிக்கல் விலகுவதற்குப் பதில் மலச்சிக்கல் உண்டாகி விடுகின்றது. சில விநாடி மூன்று அல்லது ஐந்து தடவை தொடர்ந்து பஸ்சிமோத்தானாசனம் செய்வதால் மலச்சிக்கல் கட்டாயம் நீங்கும்; உண்டாகாது. (தொடரும்)




## 17. விவாக முயற்சி

இப்படிப் பேச்சுக்கிடையே எதற்காக அந்த ஆள் வந்து மனோஹரரை அழைக்கிறான் என்ற காரணம் தெரியாமற் போகவே, பலர் வியப்புடன் அவன் பக்கம் திரும்பிப் பார்த்தனர். காரணத்தைச் சொல்லி அவன் அவர்களுடைய வியப்பைத் தணித்திருக்கலாம். அதற்குப் பதிலாக அவன் மௌனம் சாதித்து அவர்களுடைய வியப்பை அதிகமாக்கி விட்டான்.

பேச்சு சுவாரஸ்யத்தில் ஈடுபட் டிருந்த மனோஹர் முதலில் அவனைக் கவனிக்கவில்லை. சிறிது சிறிதாக அங்கே மௌனம் நிலவத் தொடங்கவே, காரணம் என்னவென்று அறிய எண்ணித் திரும்பினான். அவனுடைய வேலைக்காரன் கைகட்டியவாறு நின்று கொண் டிருந்தான். அவனைக் கண்டதும், "என்ன?" என்று கேட்டான்.

"எசமான்...!"

வேலைக்காரன் வார்த்தையை முடிக்கக்கூட வில்லை. அதற்குள்ளாக மனோஹரே புரிந்து கொண்டு, "ஏன்? அம்மா அழைக்கிறார்களா?" என்று கேட்டான்.

"ஆமாங்க!" என்றான் அந்த ஆள்.

"அம்மா கூப்பிடுகிறாளாம். போய் என்னவென்று கேட்டு விட்டு இதோ வந்து விடுகிறேன். அப்புறம் இந்த வீண் பேச்சையெல்லாம் நிறுத்தி விட்டு இன்றைய அலுவல்களைக் கவனிப்போம்!" என்றான் மனோஹர்.

அவன் சொன்ன சொற்கள் எல்லோருடைய காதிலும் விழுந்தன. உடனே பேச்சுக்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது போல் அங்கே மௌனம் நிலவியது. மனோஹர் எழுந்து வெளியே சென்றான். அவன் தலை மறைந்ததும் ஜுகல் கிஷோரும் வக்கீல் சுகபாலும் ஏக காலத்தில் சிரித்தனர்.

அம்மா என்ற சொல்லை மனோஹர் சொன்னது போலவே சொல்லிக் காட்டி ஜுகல் கிஷோர் எல்லோருடைய கவனத்தையும் கவர்ந்தான். பிறகு ஒரு முறை அந்தக் கூட்டத்தில் உள்ளவர்களைத் தன் சுழலும் விழிகளால் பார்த்து விட்டு, "இங்கே வேறு யாருக்கும் அம்மாவிடம் போக வேண்டாமே!" என்றும் கேட்டான்.

அதைக் கேட்டதும் சிலர் களுக்கென்று சிரித்தனர். காரணம், அம்மாவின் உதவியையும் ஆதாரத்தையும் கொண்டு சம்சார சாகரத்தைக் கடக்க முயற்சித்துக் கொண்டிருந்த மனோஹரின் நினைவு எல்லோருடைய மனத்திலும் மூண்டதுதான். அவனது சிறு பிள்ளைத் தனத்தை எண்ணிப் பார்த்தவர்களுக்குச் சிரிப்பு வராமல் என்ன செய்யும்?

ஜுகல்கிஷோர் சிறிது நேரம் அங்கே உட்கார்ந்திருந்தான். அவனுக்குப் பொழுது போகவில்லை. எனவே, எழுந்து சிறிது நேரம் இங்கும் அங்கும் நடை போடலானான். அந்தச் சாக்கிலேயே வெளியே உலாவி வருவதற்காகவும் புறப்பட்டுப் போய்விட்டான்.

தோட்டத்தில் உள்ள சிறிய பங்களாவுக்கு அருகில் ஒரு கொடி மறைவில் சாந்தா கௌரி உட்கார்ந்திருந்தாள். அவளுக்கு அருகிலேயே மனோஹர் இன்னொரு நாற்காலியில் உட்கார்ந்திருந்தான்.

"அம்மா! நீ சொல்வது ரொம்ப சரியான வார்த்தை. இவர்கள் எல்லோரும் வெறும் பேச்சுப் பேசுபவர்களே ஒழியக் காரியவாதிகள் இல்லை!" என்று மனோஹர் தன் பேச்சைத் தொடர்ந்தான்.

"அது சரி, மனோஹர்! ஒரு பணக்காரனை உங்கள் வழிக்குக் கொண்டு வர முடியாதா? பணக்காரர்களில் ஒருவராவது உங்கள் வழிக்கு வர வேண்டும். அவர்கள் உதவியில்லாமல் உங்களால் ஒரு காரியமும் சரியாகச் செய்ய முடியாது! தெரியும் அல்லவா?" என்றாள் சாந்தா கௌரி.

"அம்மா, இன்று அதைத்தான் நான் நிர்மானித்து முடிவு கட்டப் போகிறேன். பணக்காரர்கள் நம் வழிக்கு வராதவரையில், அதாவது அவர்களை நாம் நம் கட்சியில் சேர்த்துக் கொள்ளாதவரையில் நாட்டுக்கு நன்மை ஏற்பட முடியாது தான்!" என்றான் மனோஹர்.

"என்னைக் கேட்டால் தேசோத்தாரண விஷயத்தில் இடையூறாக இருப்பவர்கள் இந்தப் பணக்காரர்கள்தான் என்பேன்!" என்று கொஞ்சம் அழுத்தமாகவே கூறினாள் சாந்தா கௌரி.

அம்மாவுக்கு அடங்கிய பிள்ளை, "ஆமாம், அம்மா!" என்று தலையாட்டித் தாயாரின் வார்த்தைகளை ஆமோதித்தான்.

“உங்களால் வேறு ஒன்றும் முடியா விட்டாலும் ஒரு பணக்காரனையாவது உங்கள் கைக்குள் போட்டுக் கொள்ளப் பாருங்கள். என்ன நான் சொல்வது?” என்றாள் தாயார்.

“அதை நாங்கள் செய்யத்தான் போகிறோம். அதற்காக நாங்கள் ஸர் பிஹாரி லாலுக்கு எதிராக எப்பொழுதோ இயக்கம் கூடத் தொடங்கி விட்டோமே! சாந்திப் பிரியன் தனது பத்திரிகையில் இது விஷயமாக அடிக்கடி ஏதாவது எழுதிக் கொண்டே இருக்கிறான். வக்கீல் சுகபால் அவருக்கெதிராகப் பொதுக் கூட்டங்களில் பேசுவதில் எவ்விதக் குறைவும் வைப்பதில்லை!” என்றான் மனோஹர்.

“சரி, அதனால் என்ன ஏற்பட்டுவிட்டது? அவருடைய மில் மூடப்பட்டு விட்டதா? அவருடைய தொழில் நொடித்து நசித்து விட்டதா? இல்லை, பயந்து போய் அவர் உங்கள் கட்சியில் சேர்ந்து விட்டாரா? இது வரை அப்படி ஒன்றும் நடந்து விட்டதாகத் தெரியவில்லையே!” என்றாள் சாந்தா கௌரி.

“அவரை எங்கள் கட்சியில் சேர்ப்பதற்கு முதற்படியாக இவ்விருவரும் அவருடைய பெண்ணுடன் அறிமுகம் செய்து கொண்டு நெருங்கிய தொடர்பு ஏற்படுத்திக் கொள்ளத் தொடங்கி யிருக்கிறார்கள். அவள் நம் வழிக்கு வந்து விட்டால், அப்புறம் அவரை நம் வழிக்குத் திருப்ப அதிக நேரம் பிடிக்காதல்லவா?” என்று தாங்கள் எடுத்திருக்கும் முயற்சியைப் பற்றிக் கூறினான் மனோஹர்.

“உங்களுக்குப் புத்தி எங்கே இருக்கிறது? அப்பாவின் ஆதரவில் வளரும் பெண் திடுதிப்பென்று உங்கள் கட்சிக்கு இலேசில் வந்து விடுவாளா? தாய் தந்தையரை வழிக்குக் கொண்டு வரவேண்டுமென்றால் அவர்களுடைய பெண்ணை மணம் புரிந்து கொள்ள வேண்டும். தெரிந்ததா?” என்றாள் சாந்தா கௌரி. யோகவாஸிஷ்டம் படிக்கும் அவள், பேசிய பேச்சிலிருந்து அதிக அநுபவசாலியாகவே தோன்றினாள்.

“ஆம், அம்மா! நீ சொல்வது வாஸ்தவம் தான். சாந்திப் பிரியனின் எண்ணமும் இதுவேதான். அவன் மனம் விட்டு ஒரு தடவை என்னிடமேகூட இந்த விஷயத்தைப் பற்றிப் பிரஸ்தாபித்திருக்கிறான்!” என்றான் மனோஹர்.

அதைக் கேட்டதும் தாயாரின் கண்களிலே திரஸ்கார உணர்ச்சி பளிச்சிட்டது.

“சாந்திப் பிரியனின் எண்ணம் எதுவாயிருந்தால் உனக்கு என்ன? அதையா நான் கேட்டேன்? உன் எண்ணம் என்ன, சொல்லு!” என்றாள் சாந்தா கௌரி.

இம்மாதிரியான கேள்விகளைக் கேட்க நேர்ந்தால் தாயாரிடம் பக்தி கொண்ட பிள்ளைகள் வெட்கப்பட வேண்டும் என்று எந்த சாஸ்திரத்தில் சொல்லி யிருக்கிறதோ, தெரியவில்லை! மனோஹர் வெட்கித் தலை குனிந்ததுடன் இலேசாக இள நகையும் புரிந்தான்.

இதே சமயம் புதருக்குப் பின்னால் சல சலப்புச் சப்தம் கேட்டது. சாந்தா கௌரி உட்கார்ந்த வண்ணமே சப்தம் வந்த திசையில் தன் பார்வையைச் செலுத்தினாள். ஆனால் அங்கே ஒன்றும் தெரியவில்லை; அவள் யாரையும் காணவில்லை. அதற்குப் பின் சிறிது நேரம் கழித்து மங்கலான ஒளியில் ஜாகல்






# ஸாரிடான்

## இப்பொழுது சுகாதாரமான முறையில் மைக்கா காகித பாக்கிங்கில் கிடைக்கும்

—வாங்கவும் எடுத்துச் செல்லவும் மிக சௌகரியமானது.

ஒவ்வொரு 2 அணா வில்லையும் ஒரு முழு டோஸ் ஆகும்—மிக்க வேளைகளிலும் வலியை நிறுத்தப் போதுமானது.

**2 அணா**

இதில் ஆஸ்பிரின் (அஸிடில்-ஸாலிஸிலிக் ஆஸிட்) இல்லை . . . . . மயக்க மருந்துகளும் இல்லை

ஸாரிடான் துரிதமாக வலியை நிறுத்துகிறது. மெதுவாக ஊக்கி உற்சாக மூட்டுகிறது. முறுக்கேறிய நரம்புகளைத் தளர்த்தி விச்ராந்தி பெற உதவுகிறது. உண்மையில உங்களுக்கு புத்துணர்ச்சி தருகிறது. பெண்மணிகளுக்கு மாத விடாய் நாட்களில் அது ஒரு வரப்பிரசாதம்.

ஸாரிடானை உட்கொள்ளுவதால், பிற்பாடு எவ்வித சோர்வும் உண்டாகாது. அது வயிற்றைக் கோளாறுக்குவதில்லை. உடம்பு வியர்த்துக் கொட்டுவதுமில்லை. இரண்டே அணா கொடுத்து, புதிய மைகா காகித பாக்கிங்கிலுள்ள ஒரு டோஸ் வாங்கவும்.

**ஸாரிடான்** வலியை நீக்கி உங்களுக்குப் புத்துணர்ச்சி தருகிறது

10 வில்லைகளடங்கிய பிரசித்தமான சிறிய டியூபுகளிலும், குறைக்கப்பட்ட விலையில் கிடைக்கும்—

VB. 231

கிஷோர் பெரிய பங்களாவுக்குள் நுழைவதை மனோகர் மட்டும் கவனித்தான். சாந்தா கௌரியைப் பற்றி அதிகம் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல் கொண்ட ஜுகல் கிஷோர் புதருக்குப் பின்னால் வந்து ஒளிந்து கொண்டு தாயாருக்கும் தனயனுக்கும் நடந்த பேச்சு வார்த்தைகளை ஒற்றுக் கேட்டான். பிறகு மெதுவாக வந்த வழியே திரும்பிப் பெரிய பங்களாவுக்குப் போய் விட்டான்.



பங்களாவின் சூழ்நிலை சாந்தமே உருவானதாக, ஆனால் அதே சமயத்தில் உக்கிரம் வாய்ந்ததாகத் தோன்றியது. இரண்டு இரண்டு மூன்று மூன்று பேராகத் தனித்தனியே சுற்றி உட்கார்ந்து கொண்டு மெதுவான குரலில் ஏதோ பேசிக் கொண்டிருந்தனர். அவர்களுடைய பேச்சிலிருந்து யாரையோ சமாதானப் படுத்தும் முயற்சி நடந்து கொண்டிருக்கிறது என்பது தெரிந்தது. மாமிச உணவு பற்றி எழுந்த பேச்சில் சநாதனிக்கும் பயில்வானுக்கும் இடையே ஏற்பட்ட சண்டையைத் தடுக்கப் போய்க் கவிஞனும் விஞ்ஞானியும் சண்டை போடத் தொடங்கி விட்டனர் என்பதும், மற்றவர்கள் சரியான சமயத்தில் குறுக்கிடாமல் இருந்திருந்தால் அடிதடி வரைக்கும் சண்டை வளர்ந்திருக்கக்கூடும் என்பதும் உள்ளே நுழைந்த ஜுகல் கிஷோருக்குத் தெரிய வந்தது.

சாந்திப்பிரியன் சற்றுத் தொலைவில் இருந்த ஒரு ஜன்னலுக்கெதிரே நாற்காலி ஒன்றை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தான். ஜுகல்கிஷோர் அவனை நோக்கிச் சென்றான். யோசனையில் ஆழ்ந்தவாறு அமர்ந்திருந்த சாந்திப் பிரியன் அவன் வந்ததையே கவனிக்க வில்லை. ஜுகல்கிஷோர் அவனுக்குப் பின்புறம் சென்று அவன் தோளின் மீது கை வைத்து, "ஏன், அப்பா! என்ன யோசித்துக் கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டுப் பேசத் தூண்டினான்.

"ஓகோ! நீங்களா? வாருங்கள், வாருங்கள்! ஆமாம், உங்களிடம் அபிப்பிராய ஒற்றுமை என்பது எங்கே யிருக்கிறது? ஒரு தலைவனை எங்கே ஒப்புக் கொள்கிறீர்கள்? தலைக்குத் தலை தலைவனாக ஆக வேண்டும் என்றல்லவா எண்ணுகிறீர்கள்!" என்றான் சாந்திப் பிரியன் பொதுப்படையாக.

"ஜன்னலருகில் உட்கார்ந்திருப்பவனுக்கு இம்மாதிரி யெல்லாம் யோசனை ஓடுவதில்லை. உன் மனத்தில் வேறு ஏதோ எண்ணம் ஓடிக்கொண் டிருக்கிறது. எதற்காக என்னிடம் மறைக்கப் பார்க்கிறாய்?" என்றான் ஜுகல் கிஷோர்.

"அட! என் மனத்தைப் புரிந்து கொண்டு விட்டவர் போலப் பேசுகிறீர்களே! என் மனத்தில் அப்படி என்ன எண்ணம் ஓடிக் கொண்டிருக்கிறது? நீங்கள் தான் சொல்லுங்களேன்!" என்றான் சாந்திப்பிரியன்.

"சொல்லட்டுமா? ... இப்பொழுது உன் மனத்தில் ஒரு இன்பக் கனவு உருவாகிக் கொண்டிருக்கிறது!"

"பேஷ், பேஷ்! பிரமாதமாகக் கதை அளக்கிறீர்களே!"

"நானா கதை அளக்கிறேன்? உன் மனத்தில் உள்ளதைத்தான் முகம் கண்ணாடியாக எடுத்துக் காட்டிக் கொண்டிருக்கிறதே!"

"உங்களுக்கு வேறு வேலை கிடையாது. ஊர் சுற்றிப் பிழைக்கும் உங்களுக்கு இதை விட்டால் வேறு சிந்தனை ஓடுவதேது?" என்றான் சாந்திப் பிரியன்.

"என்னைப் பற்றி நீ என்ன வேண்டுமானாலும் எண்ணிக் கொள். என்னதான் ஒரு விஷயத்தை மறைக்க நீ கஜகர்ணம் போட்டாலும் என்னிடம் உன் ஜபம் சாயாது. இந்த ஜுகல்கிஷோருக்குத் தெரியாத விஷயமே இந்த உலகத்தில் கிடையாது. நினைவு வைத்துக் கொள்!" என்றான் ஜுகல்கிஷோர்.

ஜுகல்கிஷோர் சொன்னது உண்மையான வார்த்தை. அவனுக்கு எந்த விஷயமும் தெரியாமல் இருப்பது அரிது. தெரியாத விஷயத்தையும் தெரிய வைத்துக் கொள்




(சபை வாசலில்): என்ன சார், இது! எத்தனை பேரைத்தான் இலவசமாக உள்ளே விடுகிறது? சரி, நீங்கள் யார்?

"நான் இன்று கச்சேரி செய்யும் பாடகர்!"

"சரி, சரி! இன்று உள்ளே போங்கள். ஆனால் இனிமேல் இம்மாதிரி ஏதாவது சொல்லிக் கொண்டு வந்தால் உள்ளே விடமாட்டேன்!"

வதில் அவனைப் போன்ற நிபுணன் கிடைப்பது அபூர்வம். இது ஊர் அறிந்த, உலகம் அறிந்த விஷயம். எனவே எல்லோருக்குமே அவனைக் கண்டால் கொஞ்சம் கிலிதான்; பயம்தான். ஜுகல்கிஷோர் தேச பக்தர்களின் கோஷ்டியிலும் முதல்தரமான ஸ்தானத்தையே வகித்து வந்தான். அவன் இரண்டொரு சிறந்த நற்செயல்கள் செய்திருந்தான். அதன் பலனாக அவன் இந்தக் கோஷ்டியில் வலுக்கட்டாயப் படுத்திச் சேர்த்துக் கொள்ளப் பட்டான். அவனாகச் சேர்ந்து கொண்டானா, கோஷ்டியே பலவந்தப்படுத்திச் சேர்த்துக் கொண்டதா என்ற ஆலோசனை இங்கே அநாவசியம்.

அவன் அந்தத் தொண்டர்கள் கோஷ்டியில் சேர்ந்ததும் முதலாவதாகக் கர்ஜனை பத்திரிகைக்குப் பலவகையிலும் பொருளுதவி செய்தான். அதன் பலனாக அந்தக் கோஷ்டிக்கே அவன் ஒரு ஆணிவேராகி விட்டான். அவனன்றி ஒரு அணுவும் அசையாது என்ற பழமொழி அவன் விஷயத்தில் புதுமொழியாக விளங்கலாயிற்று.

அவனுக்குச் செல்வாக்கு அதிகரிக்க அதிகரிக்க எல்லோருக்கும் அவனிடம் ஒருவித பயமும் அதிகரித்து வந்தது. அதன் காரணமாக அவன் விஷயத்தில் தலையிடவே பலரும் அஞ்சினர்.

எல்லோரைக் காட்டிலும் சாந்திப் பிரியன் அவனுக்கு அதிகமாக நன்றிக் கடன் பட்டிருந்தான். காரணம், அவன் லால்ஜி சேட்டைக் கொண்டு கர்ஜனைப் பத்திரிகைக்கு ஏராளமான பொருளுதவி செய்திருந்தான். எந் நன்றி மறந்தாலும் செய்நன்றி மறக்கலாமா? எனவே சாந்திப்பிரியன் அவனிடம் அலாதி பக்திசிரத்தை பூண்டிருந்தான்.

"மூடி மறைத்து வைக்க வேண்டிய விஷயம் என்று எனக்கு ஒன்றுமே கிடையாது. அப்படியிருக்கும்பொழுது நான் உங்களிடம் ஒரு விஷயத்தை எதற்காக ஒளித்து வைக்க முயல வேண்டும்?" என்று கேட்டான் சாந்திப் பிரியன்.

"அப்படியா? அப்படியானால் எனக்குப் பரம சந்தோஷம். ஆமாம், ஸர் பிஹாரிலாலின் மகள் இருக்கிறாளே, அவளைப் பற்றி உன் அபிப்பிராயம் என்ன?" என்று கேட்டான் ஜுகல்கிஷோர்.

அந்தக் கேள்வியைக் கேட்டதும் சாந்திப் பிரியன் சற்றுத் துணுக்குற்றான். அந்நேரத்தில் அக் கேள்வி கேட்க வேண்டிய அவசியம் ஜுகல் கிஷோருக்கு என்ன வந்து விட்டது? அவனுக்கு அதன் காரணம் சரியாக விளங்கவில்லை. அவன் குஸுமாவிடம் பரிவு காட்டி வந்தான்; அவளை ஆதரித்துச் சமய சந்தர்ப்பங்களில் எழுதியும் வந்தான். அதை அவன் வாயிலாகவே அறிவதற்காக வேண்டிக் கேட்கப் பட்ட கேள்வியா, அல்லது அதற்கு வேறு ஏதாவது உட்கருத்து இருக்கக் கூடுமா?

"அவளைப் பற்றி யார் யாருக்கு எப்படி எப்படித் தோன்றுகிறதோ, அப்படி அப்படி அபிப்பிராயம் கொள்ளலாம். ஆனால் அவளது தகப்பனாரைப் பொறுத்த வரை என் அபிப்பிராயம் வெளிப்படையானது. இங்கே அதை விவரித்துக் கூற வேண்டிய அவசியம் இருக்காது என்றே எண்ணுகிறேன்!" என்று கூறி மழுப்பினான் சாந்திப்பிரியன்.

"உன் கட்டுரைகள் மூலம் நீ அவளுடைய தகப்பனாரைப் பயமுறுத்தி உன் வழிக்குத் திருப்புவதற்குப் பதிலாக விரோதியாக்கிக் கொள்கிறாய் என்றுதான் எனக்குத் தோன்றுகிறது!" என்றான் ஜுகல்கிஷோர்.

ஜுகல் கிஷோரின் பேச்சு ஒரு புறமாகச் சாயவே, சாந்திப் பிரியனுக்குத் தன் உள்ளத்தை மறைப்பது சிரமமான காரியமாகப் படவில்லை. உள்ளத்தில் உள்ளதை ஒளித்துக் கூறுவதற்காகக் கஷ்டப்பட்டுக் காரணம் தேட வேண்டிய தேவையும் ஏற்படவில்லை. எனவே, அவன் சிரித்துக் கொண்டே, "மனு தர்ம வித்தையின் கோட்பாடு ஒன்று உங்களுக்குத் தெரிந்திருக்கும் என்றே எண்ணுகிறேன். அதன் மூலம் விரோதத்தை வெளிக் காட்டி ஒருவனைத் தன் வழிக்குத் திருப்பிவிட முடியுமாம்!" என்றான்.

"ஆமாம், ஆமாம்! அது வாஸ்தவம்தான். நம் புராணங்களில் முக்திக்குப் பல குறுக்கு வழிகள் கூறப்பட்டிருக்கின்றன. அவற்றில் கடவுளை எதிர்ப்பது என்பது மிகவும் முக்கியமானது என்பதற்கு எத்தனையோ சான்றுகள் கிடைக்கின்றன. கடவுளை எதிர்த்துக் கடைத்



**பாதி விலைக்கும் குறைவு**
**ஒரு மாதத்திற்கு இந்தச் சலுகை**
**ஒவ்வொன்றும் 5 வருஷ உத்திரவாதம்**

| | ஒரிஜினல் விலை | விற்பனை விலை |
|---|---|---|
| அலாரம்கடிகாரம் | ரூ. 30, | 14/- |
| ,, உயர் ரகம் | ரூ. 40, | 16/- |
| பாக்கெட் கடிகாரம் | ரூ. 30, | 12/- |

No. 11 Size 6⅞"



| | ஒரிஜினல் விலை | விற்பனை விலை |
|---|---|---|
| 15 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | ரூ. 80 | 36/- |
| 15 ஜுவல்ஸ் 10 மைக்ரோனஸ் | ரூ. 90 | 38/- |

No. 13 Size 9⅞"
Water Proof



| | ஒரிஜினல் விலை | விற்பனை விலை |
|---|---|---|
| 15 ,, ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் | ரூ. 80 | 37/- |
| 17 ,, ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் | ரூ. 90 | 44/- |
| 17 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு 10 மைக்ரோனஸ் | ரூ.130 | 60/- |

No. 14 Size 8⅞"



| | ஒரிஜினல் விலை | விற்பனை விலை |
|---|---|---|
| 15 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | ரூ. 75 | 32/- |
| 15 ஜுவல்ஸ் 10 மைக்ரோனஸ் | ரூ. 85 | 34/- |
| 5 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | ரூ. 42 | 20/- |

**குறைந்த விலையில் பவுண்டன் பேனாக்கள்**



ஸ்வான் கோல்ட் நிப் பவுண்டன் பேனா ரூ. 14/-
கோல்ட் கேப் ரூ. 18/- பிளாக் பேர்டு ரூ. 13/-
ராஜா(ஜெர்மன்)ரூ. 10/- வைஸ்ராய் மாடல் ரூ. 6/-
வில்ஸன் ரூ. 5/- பார்க்கர் ஜுனியர் மாடல் (ஜப்பான்) ரூ. 7/-

**PIONEER WATCH COMPANY**
**Post Box No. 11428 - CALCUTTA-6**




அழகு மிக்க உங்கள் தோற்றத்திற்கு அவசியமானது...

# ஈவினிங் இன் பாரீஸ்

## BOURJOIS

போர்ஷ்வா தயாரித்துள்ள வாசனை திரவியம்

**உறுதியான சுத்தமான பற்களுக்கு**




இந்தியாவின் பிரசித்தி பெற்ற டூத் பிரஷ் பிளாஸ்டிக் உறையிலும் கிடைக்கிறது

பல காலம் நீடித்து வரும்

# ப்ளிட்டில் ஆறு கீடநாசினிகளைக் கலப்பதால் அது அதிகப் பூச்சிகளை கொல்லுவதேன்

தற்காலத்தில் விஞ்ஞானிகளுக்கு அநேக உபயோகமுள்ள கீடநாசினிகளைப் பற்றித் தெரியும்—ஆனால் ஒவ்வொன்றிலும் ஒரு குறையிருப்பதையும் அவர்கள் அறிவார்கள். எந்த ஒரு தனி கீடநாசினியும் எல்லாவகைப் பூச்சிகளையும் சேர்த்துக் கொல்லும் சக்தியுடையதல்ல.

உதாரணமாக
'A' என்ற கீடநாசினி
அதை ஸ்பர்சிக்கும் எல்லா ஈக்களையும்
கொல்லக்கூடும் . . .
பெரிதளவு கொசுக்களையும்
கொல்லலாம் . . .
ஆனால் மிகச்சொற்ப அளவு கரப்பு
களையே கொல்லுகின்றது.







'B' என்ற கீடநாசினியோ

எல்லா கரப்புகளையும் கொல்லக்கூடும்...

ஆனால் ஒரு சில ஈக்களைத்தான் கொல்லு
கிறது . . .



கொசுக்களை பாதிப்பதேயில்லை.

உண்மையைக் கூறுமிடத்தில், நீங்கள் எல்லாவகை வீட்டுப் பூச்சிகளையும் கொல்ல விரும்பினால், அதற்கு ஒரே வழிதான் உண்டு. அதாவது, நீங்கள் விதவிதமான கீடநாசினிகளைக் கலந்து உபயோகிக்க வேண்டும். அப்பொழுது ஈக்கள் ஒரு கீடநாசினியாலும், கரப்புகள் மற்றொன்றாலும், இம்மாதிரி எல்லாப் பூச்சிகளும் கொல்லப்படும். ப்ளிட்டின் ரகசியம் இதுவே. அதில் ஆறு கீடநாசினிகள் அடங்கியுள்ளன. ஒவ்வொன்றும் ஒன்றல்லது பல இன பூச்சிகளை கொல்லக்கூடியது. இவ்வெல்லா கீடநாசினிகளும் இப்படி ஒன்று சேர்ந்திருப்பதால்தான் ப்ளிட் மிகச்சக்தி வாய்ந்த கீடநாசினியாக விளங்குவதுடன், நோய்க்கிருமிகளைக் கொண்டு சேர்க்கும் பூச்சிகளினின்று உங்கள் ஆரோக்யத்திற்கு சிறந்த பாதுகாப்பு அளிக்கிறது.



நீங்கள் செலவழிக்கும் ஒவ்வொரு அணுவிற்கும் ப்ளிட் அதிகமான பூச்சிகளைக் கொல்லுகிறது

ஸ்டாண்டர்ட்-வாக்குவம் ஆயில் கம்பெனி (கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)

V. 9302

தேறும் வழியைக் காண்பது வெகு சுலபம் என்னும் உண்மையை அறிவுறுத்துவதற்காகப் பற்பல கதைகளும் வழங்கி வருகின்றன. ராவணன், இரணிய கசிபு போன்றவர்கள் அந்த வழியைப் பின் பற்றித்தான் மோட்சம் பெற்றார்கள். ஆனால் நீ மேற்கொண்டிருக்கும் இந்த வழியில் எங்கேயாவது ஒரு சிறு தவறு ஏற்பட்டாலும் என்ன ஆகும், தெரியுமா?" என்று கேட்டான் ஜுகல் கிஷோர்.

"இதெல்லாம் எனக்குத் தெரியாத விஷயமோ, அறிவுக்கு அப்பாற்பட்ட விஷயமோ இல்லை. சுகபாலின் மனமும் அங்கேதான் சுற்றிச் சுற்றி வருகிறது. என் கண்கள் எதையும் கவனிக்கத் தவறுவதில்லை. ஒருவேளை சுகபால் எனக்கு ஒன்றும் தெரியாது என்று எண்ணிக் கொண்டிருக்கலாம். ஆனால்..." என்றான் சாந்திப் பிரியன்.

அவனுடன் பேச்சுக் கொடுத்ததில் ஜுகல் கிஷோர் தனக்குத் தெரியாத இன்னொரு புது விஷயத்தையும் தெரிந்து கொண்டான். ஆனால் அவனிடந்தான் இன்னும் சொல்வதற்குப் புதிய விஷயம் பாக்கி யிருந்ததே! எனவே, "அதைத் தவிர வேறு ஏதாவது இருந்தால்...?" என்று கேட்டான்.

"அதை யொன்றும் அவ்வளவாகக் கவனிக்க வேண்டிய அவசியம் இல்லை; பொருட்படுத்த வேண்டிய தேவையும் இல்லை. ரமேஷ் என்று ஒருவன் ..."

"அட முட்டாள்! ரமேஷைப் பற்றி இங்கே யார் அப்பா சொல்கிறார்கள்? அவனைக் காட்டிலும் மிகப் பயங்கரமாக ஒரு மனிதன் உங்களுக்குள்ளேயே இருக்கிறான். நினைவு வைத்துக் கொள்!" என்றான் ஜுகல்கிஷோர்.

இப்படி அவன் சொல்லிக் கொண்டிருக்கும் பொழுது மனோஹர் அவ் வழியே அவர்களைக் கடந்து சென்றான். ஜுகல்கிஷோர் அவனைத் தன் கண்களால் சமிக்ஞை செய்து காட்டினான். ஆனால் சாந்திப் பிரியனால் அவனுடைய அந்தச் சமிக்ஞையின் பொருளைப் புரிந்து கொள்ள முடியவில்லை.

மனோஹர் வந்ததும் எல்லோரையும் ஒன்று கூட்டித் தன் திட்டத்தைக் கூறினான். அவனுடைய அபிப்பிராயத்தில் அப்பொழுது தொழிலாளர்களின் பிரச்னைதான் மிகவும் மகத்துவம் வாய்ந்ததாகத் தோன்றியது. அவர்களுடைய ஊதியத்தை அதிகரித்தல், அவர்கள் குழந்தைகளுக்குக் கல்வி புகட்டுதல், அவர்களுக்கு வைத்திய உதவி அளித்தல், தொழிற்சாலையில் வரும் லாபத்தில் ஒரு பகுதியை அவர்களுக்குப் போனஸாக அளிக்கச் செய்தல் - இவை போன்ற காரியங்களில் நாம் முதலில் ஈடுபட வேண்டும் என்று அவன் விவரித்தான்.

மனோஹர் நல்லவன், கெட்டிக்காரன்; சுமுகமாகப் பேசிப் பழகக் கூடியவன். ஆனால் அநுபவம் பற்றாதவன் என்று அவனைப் பற்றி அவன் தோழர்கள் அபிப்பிராயம் கொண்டிருந்தார்கள். அவனைப் பற்றித் தங்களுக்குள் பேச்சு எழும் பொழுதெல்லாம் இதையேதான் சொல்லியும் வந்தார்கள். ஆனால் அவன் பழகும் முறை பிறரைப் பிரமிக்க வைக்கக் கூடியதாக அமைந்திருந்தது. ஒவ்வொருவரும் தாம் கொண்ட அபிப்பிராயத்தை மாற்றிக் கொள்ளக் கூடிய நிலைமையைக் கூடப் பல சமயங்களில் உண்டு பண்ணி வந்தது. அதனால் அவர்கள் தாம் கொண்ட அபிப்பிராயத்தை ஊர்ஜிதம் செய்து கொள்ள முடியாமல் திண்டாடி வந்தார்கள்.

மனோஹர் ஒரு காரியத்தை எண்ணி விட்டால் அதை நிறைவேற்றாமல் இருந்ததில்லை. தான் கொண்ட தீர்மானத்தை நிறைவேற்றும் விஷயத்தில் அவன் யாரையும் பொருட்படுத்துவதும் இல்லை. பணத்தைப் பணம் என்று பாராமல் செலவிடுவான். இத்தனை ஆகி விட்டதே என்று எண்ணித் தயங்க மாட்டான். அதே போல் உழைப்பிலும் அவன் யாருக்கும் பின் வாங்குவதில்லை. நினைத்த காரியம் நிறை வேறும் வரை நித்திரை கொள்ள மாட்டான்; இரவு பகல் என்று பார்க்க மாட்டான்.

அவன் திட்டத்தை அங்கே கூடியிருந்தவர்கள் அனைவரும் ஒப்புக் கொண்டனர். காரணம், அவனது அந்தத் திட்டம் ஒவ்வொரு தேசத் தொண்டரும் பங்கு எடுத்துக் கொள்ளக் கூடிய வகையில் அமைந்திருந்தது

தான். பஜனை கோஷ்டிக்கு அதில் இடம் இருந்தது. பேச்சாளர்களுக்குத் தங்கள் பேச்சு வன்மையைக் காட்டக் கூடிய வாய்ப்புக் கிட்டியிருந்தது. பயில்வான் சிலம்பம் பழகவும் மல்யுத்தம் செய்யவும் மக்களுக்குக் கற்றுக் கொடுக்கலாம். சநாதனிகள் தங்களது அறநெறியை அனைவருக்கும் அறிவுறுத்தலாம். கவிஞர்கள் தொழிலாளர் பெருமை பற்றிக் கவிதைகள் புனையலாம். விஞ்ஞானிகள் மனம் வைத்தால் இன்ஜினீயர்களைப் போன்ற அறிவைப்புகட்டி ஒவ்வொரு தொழிலாளியையுமே இன்ஜினீயராக்கி விடலாம். சுருங்கச் சொன்னால் மனோஹர் தயாரித்த அந்தத் திட்டத்தில் யாருக்கும் தங்கள் காரியங்களைச் செய்வதற்கு எவ்வித மான இடையூறும் கிடையாது. எல்லோரும் ஒற்றுமையாக ஒரு காரியத்தில் இறங்குவதற்கு இதைக் காட்டிலும் வேறு என்ன நல்ல திட்டத்தைத் தயாரித்துவிட முடியும்?

"தொழிலாளிகள் இத் திட்டத்தைக் கட்டாயம் ஏற்பார்கள். அந்தப் பொறுப்பை நான் ஏற்றுக் கொள்கிறேன்!" என்று கூறி ஜுகல்கிஷோர் அந்தப் பொறுப்பைத் தானே வலிய வந்து ஏற்றான். பிறகு இரண்டொருவர் காதுகளில் மட்டுமே விழக் கூடிய அளவில் குரலைத் தாழ்த்திக் கொண்டு, "இந்த விஷயத்தில் சண்டை சச்சரவு என்று ஏதாவது ஏற்பட்டு விட்டால் வக்கீல்களுக்கும் வேண்டிய வேலைகள் கிடைக்கக் கூடும் அல்லவா?" என்றான். (தொடரும்)

# பொறி இயல் நிபுணரின் தீனக் குரல்

உண்மையிலேயே இந்தக் கடிதம் ஆண்டவனுக்கு எழுதப்பட வேண்டியது. அவருக்கு முகவரியும் தெரியாது. எப்படியோ போய்ச் சேரக் கூடியதாக விலாசம் தெரிந்து எழுதினாலும், அவருக்கு இருக்கும் அக்கப்போரில் அப்பாவித் தமிழ் காட்டு வறட்டு ராமநாதபுரத்து மூலையிலிருந்து வேலையில்லாத் திண்டாட்டத்தினால் நலிந்த பிராணியற்ற தீனக் குரல் எங்கே காதில் விழப் போகிறது!

அதனால்தான் இதை உங்களுக்கு எழுதுகிறேன். பொதுநல அக்கறையுள்ள பத்திரிகையாளர்களுக்குத்தானே அவலக்குரல் கேட்கும் கடமை வந்து சேர்ந்திருக்கிறது, அரசியல் தலைவர்களுக்கு மற்ற முக்கிய ஜோலிகளெல்லாம் முடிந்து 'அடடா! இந்த நாடு இருக்கிறதே, இதில் மக்கள் இருக்கிறார்களே, அவர்களுக்கு வயிறு இருக்கிறதே!' என்ற நினைப்பு ஏற்படுகிற மட்டிலுமாவது!

என் கதையைச் சொல்லுகிறேன், கேளுங்கள்:

1943-ம் வருஷம் எங்கள் ஹைஸ்கூலில் எஸ்.எஸ்.எல்.ஸி., படித்துப் பள்ளியிலேயே முதல்வனாகத் தேறினேன். பிறகு திருச்சி அர்ச். ஜோசப் கல்லூரியில் இண்டர்மீடியட் வகுப்பில் சேர்ந்து 1945-ம் ஆண்டு அந்தப் பரீட்சையிலும் முதலாம் வகுப்பில் தேறினேன். அவ்வாண்டின் கல்லூரித் தமிழ்ப் பரிசும் எனக்குக் கிடைத்தது.

பிறகுதான் ஜீவனம் என்பது தேள், அதற்குக் கொடுக்கு உண்டு என்று உணர ஆரம்பித்தேன்.

பர்மா நிலை சீர்கேடுற்றது. செட்டியார்களாகிய எனது குடும்பத்தின் பொருளாதாரமும் சீர்குலைந்தது. மேற் கொண்டு படிக்க இயலாமல் வேலை தேடும் முயற்சியில் இறங்கினேன். ஒவ்வொரு காரியாலயமாக ஏறி இறங்கினேன், தொங்கப் போட்ட முகத்தோடு. நல்ல மனம் படைத்த நண்பர் ஒருவர் இலங்கைக்கு வாவென என்னை அழைத்துச் சென்றார்.

இலங்கையில் இரண்டாண்டு காலம் மிக நன்றாகக் கழிந்தது. நல்ல வேலை. நல்ல சம்பளம். வயிறும் நிரம்பி மனசும் மகிழ்ந்திருக்கும் போது கடலுக்கு அப்பால் கிடக்கும் தாய் நாடு எப்படியோ ஆகர்ஷண சக்தி பெற்று விடுகிறது. போதாததற்கு இலங்கை சர்க்கார் வேறு என்னைப் போன்று வயிறு வளர்க்க இலங்கை செல்லும் இந்தியர்களுக்குப் புதுப் புது சட்டங்களால் தொந்தரவு கொடுக்க ஆரம்பித்தனர்.

இந்தியாவுக்கு வந்தேன். என்னை நானே மிகப் புத்திசாலி யென நினைத்துக் கொண்டு மீண்டும் மீண்டும் வேலையில்லாக் கும்பலில் ஒருவனாய்த் ததளிக்காமல் இருக்க முயற்சி செய்து அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் எஞ்ஜினியரிங் கல்லூரியில் சேர்ந்தேன். மிகுந்த கஷ்டங்களுக்கிடையே 1954ஆம் ஏப்ரலில் மெக்கானிக்கல் எஞ்சினீயர் என்ற பட்டத்தோடு வெளியே வந்தேன்.

என்ன பிரயோசனம்! வேலை யில்லாத் திண்டாட்டப் பேய் கோரப் பற்களைக் காட்டி, 'என்னடா, பயலே! என்னை ஏமாற்றி விடலாம் என்றா பார்த்தாய்!' என்று கூறுகிறது.

இத்தனைக்கும் இடையே எனக்கு மணமாகி நான் இரண்டு குழந்தைகளுக்கும் தகப்பனாகி விட்டேன். சர்க்கார் வேலைகளுக்கு வயது வரம்பு வைத்திருக்கிறார்கள். என்னுடைய விக்கிரமாதித்த வாழ்க்கையினால் அந்த வரம்பெல்லாம் கடந்து விட்டேன். தொழிலதிபர்களாயுள்ள புண்ணியவான்களுக்கோ தங்கள் மச்சான், மாமன் பிள்ளைகளுக்கும், வேண்டியவர்களுக்கும் கொடுப்பதற்கே உத்தியோகங்கள் போதுமானதாக இல்லை என்று வருத்தமாக இருக்கிறது.

எனவேதான் விக்கினங்கள் தீர்த்து வைக்கும் விநாயகப் பெருமான் திருவுருவம் தாங்கி வந்த "கல்கி" இதழில் 'இதோ வேலை' என்ற பிரசித்தி நண்பரின் அபயச் செய்தி எனக்குப் பெரு மகிழ்ச்சி யூட்டியது.

அது பற்றி மேல் விவரங்கள் அறிய ஆவல் உள்ளவனாக இருக்கிறேன். வேலைக்கு விண்ணப்பங்கள் எந்த விலாசத்துக்குப் போட வேண்டும்! என் போன்றவர்களுக்குச் சம்பள விகிதம் எப்படி என்ற விவரங்களெல்லாம் தெரிவித்தீர்களானால் மிக்க நன்றியுடையவனாக இருப்பேன்.

நாட்டரசன் கோட்டை
27 — 8 — 54

நா. கணேசன்

[பொறி இயல் நிபுணர்: அத்துடன் இவ்வளவு அருமையாகத் தமிழைக் கையாண்டு கடிதம் எழுதக் கூடியவர். இவருக்கு தம் சொந்த நாட்டிலேயே ஓர் உத்தியோகம் கிடைத்தால் எவ்வளவு நலமாயிருக்கும்? —ஆசிரியர்]

# சக்கரவர்த்தித் திருமகன்

## 23. கோபமும் சமாதானமும்

ராமன் கௌசல்யா தேவியின் மனைக்குச் சென்றான். அங்கே பிராமணர்கள், விருந்தினர்கள், ஸ்திரீகள் எல்லாரும் சந்தோஷமாகப் பட்டாபிஷேகத்தை எதிர்பார்த்துக் கொண்டு கூடியிருந்தார்கள். மூன்றாம் கட்டுக்குள் கௌசல்யா தேவி வெண் பட்டு உடுத்தி ஓமத்தீயில் நெய் விட்டுக் குமாரனுடைய க்ஷேமத்திற்காகத் தேவதைகளைப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தாள். ராமன் வந்ததும் எழுந்து அவனை ஆலிங்கனம் செய்து உச்சிமோந்து யுவராஜா ஆகப் போகும் குமாரனுக்குத் தகுந்த ஒரு நல்ல ஆசனத்தைக் காட்டி உட்காரச் சொன்னாள்.

"அம்மா! எனக்கு இந்த ஆசனம் தகாது. கீழே தர்ப்பைப் புல் பரப்பி உட்கார வேண்டிய தபஸ்வி நான். தங்களுக்கு வருத்தம் தரக் கூடிய சமாசாரத்தைக் கொண்டு வந்திருக்கிறேன்; பொறுத்துக் கொண்டு என்னை ஆசீர்வதிக்க வேண்டும்" என்று கூறிச் சுருக்கமாக நடந்த விஷயத்தை ராமன் கௌசல்யைக்குச் சொன்னான்.

"அரசர் இராஜ்யத்தை பரதனுக்கு அளிக்க விரும்புகிறார். நான் பதினான்கு வருஷம் தண்டகாரண்யத்தில் வனவாசம் செய்ய வேண்டும் என்று அரசருடைய ஆணை. உங்களிடம் சொல்லி விடை பெற்றுக் கொண்டு இன்றே நான் செல்ல வேண்டும்" என்றான்.

இதைக் கேட்டதும் வாழை மரம் அறுபட்டுக் கீழே விழுவதுபோல் கோசலை தரையில் விழுந்தாள். லக்ஷ்மணனும் ராமனும் அவளை யெடுத்துத் தடவிக் கொடுத்து உட்கார வைத்தார்கள்.

"என் இதயம் இரும்போ? கல்லோ? நான் இன்னும் உயிருடன் இருக்கி





# ராஜாஜி

றேனே!" என்று மகனைக் கட்டிக் கொண்டு அழுதாள்.

லக்ஷ்மணனுக்குக் கௌசல்யா தேவியின் துக்கத்தைப் பார்த்துச் சகிக்கமுடியவில்லை. அரசன் மேல் கடுங் கோபம் மேலிட்டுப் பேச ஆரம்பித்தான்.

* *

"கொடும் பாதகங்கள் செய்த துன்மார்க்கர்களுக்கு விதிக்கும் தண்டனையை ராமசந்திரனுக்கு இந்தக் கிழ அரசர் விதித்திருக்கிறார். என்ன குற்றம் ராமன் செய்தான் என்று கண்டு இந்தப் பிராயச்சித்தத்தை விதித்தார்? விரோதிகளில் கூட எவனும் ராமன் பேரில் ஒரு குற்றம் சாற்றினதில்லை. மூடனாய்ப் போனார் நம்முடைய தந்தை. கிழ வயதில் காதலின் காரணமாகப் புத்தியை இழந்தார். இவர் அரசராக இருக்க இனித் தகுந்தவரல்ல. ஸ்திரீயின் பேச்சைக் கேட்டு அதருமம் செய்யும் ஒருவர் எப்படி அரசராக இருக்கலாம்? பகைவர்கள் கூட உன்னைக் கண்ட மாத்திரத்தில் உன் மேல் அன்பு செலுத்துவார்கள். உன்னை வனம் போகச் சொல்லுகிறார் மூடர். அண்ணா! நீயும் நானும் சேர்ந்து இவரைத் தகர்த்து விட்டு ராஜ்யத்தை இன்று முதல் ஆள்வோம். யார் நம்மை எதிர்க்கத் துணிவார்கள்? எதிர்க்கத் துணிந்தவர்களை ஹதம் செய்வேன். நீ எனக்கு அநுமதி கொடுத்தால் போதும். நான் ஒருவனே பார்த்துக் கொள்ளுகிறேன். பரதன் ராஜ்ய பதவிக்கு வருவதாம், நீ வனம் புகுவதாம்! உலகம் சிரிக்கும். இதற்குச் சம்மதிக்க வேண்டாம். நான் இதைப் பொறுத்துக்கொண்டிருக்க முடியாது. நம்மை எதிர்ப்பவர்களை ஹதம் செய்து விட்டு, எந்த இடைஞ்சலுமில்லாமல் நீ ஆட்சி புரிந்து வரும்படி நான் பார்ப்பேன். இந்தச் சக்தி எனக்கு உண்டு. சூரியன் உதிப்பதற்குப் பதிலாக பெரிய இருள் உதயமாகி விட்டது. பட்டாபிஷேகம் எதிர்பார்த்துக் கொண்டிருக்க, வனவாசம் என்கிறார் அரசர். இந்த அதருமத்தைப் பொறுத்துக் கொண்டு நயமாகப் பேசுவதில் பயனில்லை. என்னால் இதைச் சகிக்க முடியாது. என் தருமத்தை நான் நடத்தியே தீருவேன். அம்மா, நீ பார்! ராமா, நீயும் பார் என் சக்தியை!" என்றான்.



லக்ஷ்மணன் சொன்னது கௌசல்யைக்கு ஆறுதல் தந்தது. ஆயினும் புருஷனை ராஜ்யாதிகாரத்தினின்று நீக்கி விட்டு, ராஜ்யத்தை ஆக்கிரமிப்பது முதலிய, அதற்கு முன் என்றும் கேளாத பேச்சுக்களைக் கேட்டுப் பயந்தாள்.

"ராமா! லக்ஷ்மணன் சொல்வதையெல்லாம் சரியாக ஆலோசித்துப் பார். காட்டுக்குப் போக வேண்டாம். போனால் நான் தனியாக எப்படி இங்கே சத்துருக்களிடையில் இருக்க முடியும்? உன்னுடன் நானும் வந்து விடுகிறேன்!" என்றாள்.

தம்பி சொன்னதைச் சாந்தமாகக் கேட்டுக் கொண்டிருந்தான் ராமன். லக்ஷ்மணனுடைய ரோஷம் பொங்கி வடிய வேண்டும்; அதை முற்றிலும் அடக்க இயலாது என்று எண்ணிக் கோபம் தீரப் பேச விட்டான்.

பிறகு கௌசல்யா தேவியை நோக்கி, "தாயே! என்னுடன் யாரும் காட்டுக்குப் போகும் பேச்சு வேண்டாம். வயோதிக அரசருக்கு நீங்கள் சுச்ரூஷை செய்து கொண்டு பொறுமையுடன் இங்கேயே இருப்பது உங்கள் கடமை. மகாராஜனைப் புருஷனாகக் கொண்ட

பட்டமகிஷி எவ்வாறு புருஷனை இழந்த ஒரு ஸ்திரீயைப் போல் வனத்துக்கு என் கூட வரலாம்? அது தகாது. நான் வனவாசம் முடிந்து திரும்பிவரப் போகிறேன். எல்லாரும் சுகமாகப் பல்லாண்டு வாழ்வோம். தந்தையின் வாக்கு தருமமோ அதருமமோ, சுயமாகச் சொன்னதோ, பிறர் சொல்லக் கேட்டு மோசம் போய்ச் சொன்னதோ, எப்படியாயினும் சரி, அதைச் சிரமேற் கொண்டு நிறைவேற்றுவது என் கடமை. இந்தத் தருமத்தை நான் புறக்கணித்து விட்டு எந்தப் பொருளைப் பெற்றும் எந்தப் பதவியை வகித்தும் சுகமோ புகழோ பெற முடியாது. லக்ஷ்மணா, நீ சொல்லும் யோசனை முற்றிலும் தவறு. உன் சக்தியை நான் அறிவேன். சந்தேகமே யில்லை. எல்லாரையும் தோற்கடித்து நாசம் செய்து எனக்கு நீ ராஜ்யம் சம்பாதித்துக் கொடுப்பாய். என் மேல் உனக்கு இருக்கும் அன்பும் எனக்குத் தெரியும். ஆனால் அது நம்முடைய வம்சத்துக்குத் தகாது. பிதிரு வாக்குப் பரிபாலனம் என்பது சிறந்த தருமம். அதை இழந்து வேறு எதைச் சம்பாதித்தாலும் ஈடு ஆகாது.”

இவ்வாறு இருவரையும் சமாதானப் படுத்த முயன்றான் ராமன். லக்ஷ்மணனுடைய கோபம் அவ்வளவு சுலபமாகத் தணியுமா? தன்னைப் பற்றிய விஷயமாக இருப்பின், ஒரு வேளை கோபம் எளிதில் தணியும். ராமனுக்கு இந்தத் துக்கம் கொஞ்சமும் காரணமின்றி மிக அநியாயமாய் நேர்ந்ததே என்கிற கோபம் அவனை விட்டு அகலவில்லை. படம் எடுத்துச் சீறும் நாகப்பாம்பைப் போல் கண்களினின்று கோபப்பொறிகள் பறந்து கொண்டிருந்த லக்ஷ்மணனைத் தனியாக உட்கார வைத்து ராமன் நிதானமாகப் பேசினான்.

* * *

“தம்பி, எனக்கு நீ வெளியில் நடமாடும் உயிரல்லவா? நான் சொல்லுவதைக் கேள். நீ தைரியசாலி. உன் கோபத்தையும் என்னைப் பற்றிய துக்கத்தையும் நீ அடக்கியாள வேண்டும். அது உன்னைப் பிடித்துக் கொண்டு வெறியாட்டமாட இடம் கொடுக்காதே. தருமம் என்பதைப் பலமாகப் பற்றிப் பிடித்து இப்போது ஏற்பட்ட அவமானத்தை ஒரு பெரிய சந்தோஷமாக மாற்றுவோம். பட்டாபிஷேகத்தை முற்றிலும் மறந்து விட்டு, நம் கருத்தையெல்லாம் வேறு துறையில் செலுத்துவோம். நம்மைப் பெற்ற தந்தையின் நிலை இப்போது என்ன என்பதை நன்றாக ஆலோசிப்போம். அவருக்கு ஏற்பட்டிருக்கும் பயம் என்னவென்பதை நாம் உணர்ந்து நடந்து கொள்ள வேண்டும். எந்தக் காரணத்தைக் கொண்டோ கொடுத்துவிட்ட ஒரு வரத்தை இல்லையென்று இப்போது சொன்னால் அசத்தியத்தில் இறங்கினதாகும்; பாபம் வந்து சுற்றிக் கொள்ளும்; இது வரையில் அவர் நடத்திய சகல தருமமும் தானமும் புண்ணிய கருமங்களும் பயனின்றிப் போகும். இந்தப் பெரும் பயத்தினால் நம் தந்தை வேதனைப் படுகிறார். அவருடைய பயத்தைத் தீர்ப்பதல்லவோ நம்முடைய கடமை? என்னைப் பற்றி வருந்துகிறார். எனக்கு வருத்தம் கொஞ்சமுமில்லை, உனக்கும் வருத்தமில்லையென்று அவருடைய சந்தேகத்தை முற்றிலும் போக்கி அவருக்கு நாம் வழி ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும். நமக்கு உயிர் கொடுத்த தந்தையின் பயத்தைப் போக்கி அவர் மனம் நிம்மதி யடையச் செய்வது புத்திரர்களாகிய நம்முடைய கடமை. பரலோகத்தைப் பற்றி நம்முடைய தந்தை பயப்படுகிறார். அந்தப் பயத்தை நாம் போக்க வேண்டும். இது வரையில் நாம் அவருக்கு எள்ளளவும் துக்கமோ அதிருப்தியோ தந்ததில்லை. இப்போது நாம் அவர் பரலோகத்தைக் குறித்துப் பயப்படுவதற்குக் காரணமாய் விட்டோம். அதைச் சுலபமாக நாம் தீர்க்கலாம். அப்படிச் செய்யாமல் அவருடைய சங்கடத்தை அதிகப் படுத்தலாமா? இந்தக் காரணத்தினால், லக்ஷ்மணா, பட்டாபிஷேகத்தைப்பற்றி முற்றிலும் என் மனம் விலகி வனம் போவதிலேயே ஈடுபட்டு விட்டது. நான் காட்டுக்குப் போய் பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்விப்பதே என்னுடைய ஆசையும் மகிழ்ச்சியுமாகி விட்டது. இதைத் தாமதப் படுத்தினால் கைகேயிக்குச் சந்தேகம் உண்டாகும். ஆனபடியால் இன்றே வனம் சென்று அவளுடைய மனம் நிம்மதியடையச் செய்ய வேண்டும். சத்தியப் பிரதிக்ஞையைப் பற்றிய பயம் தீர்ந்து போய் நம் தந்தை சுகமாக இருப்பார். நான் துயரமடைவேன் என்றல்லவா அவர் வேதனைப் படுகிறார்? எனக்குக் கொஞ்சமும் துக்கமில்லை என்று அவருக்குத் தெரிவானால் அவருடைய வேதனை அவரை விட்டு விலகும். இதனாலேதான் நான் அவசரப் படு

கிறேன். கைகேயியைப் பற்றி நாம் கோபித்துக் கொள்ளக் கூடாது. நம்மிடத்தில் அவள் இதுவரையில் எவ்வளவு பிரீதி வைத்திருந்தாள்! திடீர் என்று இம்மாதிரியான எண்ணம் அவளுக்கு உண்டானது விதியின் காரியம். நாம் அவளை நிந்திக்க லாகாது. மக்கள் ஏதேதோ சங்கற்பம் செய்வார்கள். ஆனால் விதி வேறு விதமாகத் தீர்த்து விடுகிறது. இது கைகேயினுடைய காரியமே அல்ல. விதி அவளை ஒரு அறிவில்லாத கருவியாகப் பயன்படுத்தி யிருக்கிறது. பழியைச் சுமக்கும் துக்கம் அவளுக்கு வந்து சேர்ந்திருக்கிறது. அவளிடத்தில் நாம் வைத்து வந்த அன்பு அப்படியே இருக்க வேண்டும். வஞ்சக எண்ணம் அவள் உள்ளத்தில் முந்தியே இருந்திருந்தால்அவள் நடவடிக்கை வேறு விதமாக இருந்திருக்கும். திடீர் என்று இந்த விதம் நிர்த் தாட்சண்யமாக 'ராமனே, நீ வனம் செல்!' என்று அவள் தன் வாயாலேயே சொல்லுவதற்குக் காரணம் தெய்வச் செயலே, சந்தேகமில்லை. அவள் மேல் நாம் கோபம் கொள்ள லாகாது. அவள் எவ்வளவு மேன்மைக் குணம் பொருந்தியவள். நம்மைப் பெற்ற தாயைப் போல் பார்த்து வந்தவள்! எவ்வளவு பண்பாடு அடைந்தவள் புருஷன் எதிரில் இம்மாதிரி கூச்சமின்றி ஏன் நடந்து கொண்டாள்? இதற்குத் தெய்வத்தின் செயலல்லாமல் வேறு காரணமிருக்க முடியாது. விதியை யார்தான் எதிர்க்க முடியும்! மகா தீரர்களான ரிஷிகள் கூடத் தங்கள் தவத்திலிருந்து திடீரென்று வழுவிப் போயிருக்கிறார்கள். தெய்வத்தால் வந்ததை எதிர்க்கும் ஆற்றலைக் கைகேயி எப்படிப் பெறுவாள்? நம்முடைய மனோ தைரியத்தால் இந்த அனர்த்தத்தை நாம் சந்தோஷ நிகழ்ச்சியாகச் செய்து விடுவோம். அதுவே நம்முடைய வீரத்துக்கு அடையாளம். லக்ஷ்மணா, வனம் செல்லுவதற்குச் சங்கற்பம் முறைப்படி செய்து பெரியோர்களுடைய ஆசியைப் பெற்றுக் கொண்டு நான் உடனே போக வேண்டும். தாமதம் கூடாது. அபிஷேகத்துக் கென்று கொண்டு வந்திருக்கும் கங்கை ஜலத்தைக் கொண்டு வா! அதையே வனவாச விரத சங்கற்பத்துக்கு உபயோகித்துக் கொள்ளுகிறேன். இல்லை! வேண்டாம்! அந்த ஜலம் பட்டாபிஷேகத்துக்கு உபயோகப் பட வேண்டிய ராஜாங்கப் பொருள். அதை நாம் எப்படித் தொடலாம்? நாமே கங்கை சென்று ஜலம் கொண்டு வருவது நலம். தம்பி, விசனப் படாதே. ராஜ்யம், சம்பத்து இவற்றைப் பற்றிச் சிந்தனை செய்யாதே. வனவாசமே எனக்கு மேன்மையான பாக்கியம். நம்முடைய சிறிய அன்னை பேரில் கோபிக்க வேண்டாம். அபிஷேகக் காரியங்களைத் தடுத்தது அவளல்ல. தெய்வம் வகுத்ததை அவள் பேரில் போடலாகாது." இவ்வாறு ராமன் சாந்தமாகத் தம்பிக்குத் தன் அந்தராத்மாவின் கருத்தை விவரமாக எடுத்துச் சொன்னான்.

இந்த இடத்திலெல்லாம் வால்மீகி உபயோகித்திருக்கும் பதம் "தைவம்". சம்ஸ்கிருத இலக்கியங்களில் "தைவம்" என்றால் "விதி" என்று பொருள். தைவம், திஷ்டம், பாக்யம், நியதி, விதி இந்தப் பதங்களெல்லாம் எதிர்பாரா

ததும் காரண மறியாததுமான நிகழ்ச்சிக்கு ஒரு பொருள் கொண்ட பல மொழிகள். தன்னுடைய முயற்சி அல்லது பிறருடைய சூழ்ச்சி யல்லாது நிகழும் நிகழ்ச்சியை இந்தப் பெயர்களிட்டுச் சொல்வார்கள். 'எல்லாம் ஈசுவரனுடைய செயல்' என்கிற கொள்கையினால் 'விதி'க்கும் ஈசுவர ஸங்கல்பத்துக்கும் கொஞ்சம் குழப்பம் ஏற்படுவது இயற்கை. ஆனால், ராமன் இந்தச் சந்தர்ப்பத்தில் தம்பிக்குச் செய்த உபதேசத்தில் கைகேயினுடைய காரியத்தைத் தேவர்கள் தங்களுக்காகச் செய்த சூழ்ச்சி என்று அறிந்து சொல்லவில்லை. சாதாரண மக்கள் வாழ்க்கையில் "விதியால் நடந்தது; வருத்தப் படாதே; யார் பேரிலும் குற்றம் சொல்லுவதற் கில்லை" என்று ஆறுதல் சொல்லுவது போல் சொன்னான். அவ்வளவே.

கம்ப ராமாயணத்திலும் 'யாவராலும் மூட்டாத காலக்கடைத் தீயென மூண்டெழுந்த' இளையோனைப் பார்த்து ராமன் சொல்லுகிறான்.

> நதியின் பிழையன்று
> நறும்புனல் இன்மை அற்றே
> பதியின் பிழையன்று
> பயந்து நமைப் புரந்தான்
> மதியின் பிழையன்று
> மகன்பிழை யன்று, மைந்த!
> விதியின் பிழைநீ இதற்கு
> என்னை வெகுண்ட தென்றான்.

• • •

**ரா**மன் சொன்ன சமாதானம் தம்பியின் கோபத்தைக் கொஞ்ச நேரம் அடக்கிற்று. ஆனால் மறுபடியும் மிக வேகத்துடன் கோபம் பொங்கி விட்டது. "இது விதியின் வேலை. சிற்றன்னையின் மதி கெட்டதற்கு அது காரணமா யிருக்கலாம். ஒப்புக் கொள்ளுகிறேன். அவளை நான் கோபிக்கவில்லை. ஆனால் விதியினால் அனர்த்தம் நடந்து விட்டது என்று சும்மா இருந்து விடலாகாது. அனர்த்தத்தைச் சீர்ப்படுத்தி நியாயத்தை ஸ்தாபிப்பது க்ஷத்திரியனுடைய தருமம். வீர புருஷன் விதிக்கு அடங்கிப் போவதா? ராமனுக்குப் பட்டாபிஷேகம் என்று நகரமும் நாடும் பறைசாற்றி விட்டு, எப்போதோ கொடுத்து மறந்து போன வரங்களை இப்போது கிளப்பி, உன்னைக் காட்டுக்குப் போ 'என்று ஒரு வஞ்சகர் உத்தரவிட்டால் அதை விதி என்று எடுத்துக் கொண்டு அடங்கிப் போவது புருஷ லக்ஷணமல்ல. கீழ்வகை ஜனங்களே விதிக்குத் தலை வணங்குவார்கள். நம்மைப் போன்ற வீரர்கள் விதியை எதிர்த்து வெற்றி பெறவேண்டும். வீரியமில்லாதவர்களே விதிக்குத் தலை வணங்குவார்கள். நான் அப்படிச் செய்ய முடியாது. இன்று பார்ப்பீர்கள் விதியின் பலத்துக்கும் வீர புருஷனுடைய பலத்துக்கு முள்ள வித்தியாசத்தை. விதி என்கிற மத யானையை நான் அடக்கித் திருப்பிக் கொண்டு வரப் போகிறேன். உம்மை வனம் செல்லும்படி சூழ்ச்சி செய்தவர்களையே காட்டுக்கு நான் அனுப்பப் போகிறேன். உமக்கு வனம் போகும் ஆசை இருந்தால் அதைப் பிறகு நிறைவேற்றிக் கொள்ளலாம். அதற்குத் தகுந்த காலம் உண்டு. பல்லாண்டு ராஜ்யத்தை ஆண்டு நம்முடைய முன்னோர் செய்து காட்டியபடி ராஜ்யத்தைப் புத்திரர்களிடத்தில் ஒப்புவித்து விட்டு வனம் சென்று தவம் செய்யலாம். இப்போது உம்முடைய ஆட்சியை யாரேனும் எதிர்த்தால் அவர்களைத் தொலைத்துவிட நான் இருக்கிறேன். என் இரு புயங்களை அழகுக்காகவா பெற்றேன்! இந்த வில்லும் இந்த பாணங்களும் இடுப்பில் தொங்கும் இந்தக் கத்தியும் அலங்காரத்துக்கா? அல்லது இவை நாடகமேடை வேஷச் சாமான்களா? நான் உம்முடைய வேலைக்காரன். உத்தரவு தர வேண்டும். பிறகு பார்க்கவும், இந்த வேலைக்காரனுடைய வேலையை!"

இவ்வாறு மறுபடியும் கொழுந்து விட்டெரியும் தீ போல் கிளம்பிய லக்ஷ்மணனுடைய ஆத்திரத்தை ராமன் மெதுவாகத் தணித்தான்.

"நம்முடைய பெற்றோர் உயிருடன் இருக்கும் வரையில் அவர்களுடைய சொற்படி நடப்பது நம்முடைய கடமை. பிதாவின் கட்டளையை மீறும் காரியம் என்னால் முடியாது. அவர் சொன்ன சொல்லை நிறைவேற்றித் தந்து அவரை சத்திய பிரதிக்ஞராக்குவது நம்முடைய முதல் கடமை. பெற்ற தாய் தந்தையரை அவமதித்து, தருமமே உருவமான பரதனையும் கொன்று விட்டா ராஜ்யத்தைச் சம்பாதிப்பது? அப்படிச் செய்து விட்டாலும் அதனால் ஏதேனும் சந்தோஷம் அடைய முடியுமா? நான் சொல்லுவதைக் கேள்" என்று சொல்லி லக்ஷ்மணனுடைய கண்ணில் பெருகிய கண்ணீரைக் கையால் துடைத்துச் சமாதானப் படுத்தினான்.

**ரா**மபிரான் தன் கையால் கண்ணீரைத் துடைத்த பிறகும் கோபம் நிற்குமா? லக்ஷ்மணன் சாந்தமானான்.



# அன்பின் வழி

**நாமகிரி**





**பா**லுசாமி வாசல் திண்ணையில் சாய்ந்து கொண்டு ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்தார். அவரது வயோதிகத் தமக்கை விதவையாகி அவருக்குச் சுமையாக எந்த நேரமும் அவரிடம் வரத் தயாராக இருந்தாள். அப்படி நேரிட்டால் அது தம் மனைவிக்குத் தீராத 'தலைவலி'யாக இருக்குமே என்பதுதான் அவரது கவலை. தம் மனைவியிடத்தில் அவருக்கு அலாதி அன்பும் மதிப்பும் உண்டு. அவள் செக்கு மாடு போல் உழைத்துக் குடித்தனத்தை வெகு செட்டாக நடத்தி வருவதால்தான் தம்மிடம் சொற்ப ஐசுவரியம் சேர்ந்துள்ளது என்ற தீவிர நம்பிக்கை கொண்டிருந்தார். அந்த அளவுக்கு அவளிடம் அவருக்கு நன்றி உணர்ச்சி அபாரமாக இருந்தது. அதனால் அவர் ஒரு போதும் அவளுடைய சொல்லுக்கு எதிர் சொல்ல மாட்டார். இயற்கையிலேயே கணவன் மனைவி இருவரும் உள்ளுக்குள் மகா கருமிகளாயிருந்தும், மேலுக்குக் கம்பீரமாய் நடந்து கொள்ளும் அசாத்திய சாமர்த்தியம் பெற்றவர்கள். இதன் பயனாக அவர்களது மூத்த பிள்ளை ராஜுத்துக்கு நல்ல சம்பந்தம் கிடைத்தது. பணக்கார இடத்துப் பெண்ணான ராதையைக் கலியாணம் செய்து வைக்க முடிந்தது. அந்தப் பெண் ஏராளமான சீர்வகைகள் கொண்டு வந்திருந்தாள். குணத்திலும் அவள் பெரிய வீட்டுப் பெண்ணுக்கு ஒப்பாகவே இருந்தாள். ஆமாம், சிறிதும் அகம்பாவ மின்றிக் காலையிலிருந்து மாலை வரை தன் மாமியாரைப் போலவே வேலை செய்வாள். ஒருநாள்கூட அவள் முகம் கோணியது கிடையாது. தப்பித் தவறிக் கூடத் தன் பெற்றோர்

**பாரதி வாக்கு**

மனிதன் செய்யும் அநியாயங்களில் மாமிச போஜனமே மிகவும் இழிவான அநியாயமென்று எனது புத்திக்கு நிச்சயமாகப் புலப்பட்டிருக்கிறது. மனிதன் செய்யக் கூடிய பாவங்கள் அனைத்திலும் இதுவே மிகக் கொடிய பாவம் என்று எனது புத்திக்கு ஐயம்திரிபற விளங்கியிருக்கிறது.

களிடம் புகுந்த வீட்டாரைப் பற்றி எந்த விதக் குறையும் சொல்லிக் கொண்டதில்லை.

ராதையின் பெற்றோரும் மிகவும் உயர்ந்த குணம் படைத்தவர்கள்.

ராதையின் விவாகத்துக்குப் பிறகு அவளுடைய புருஷன் வீட்டு உண்மை நிலை அவர்களுக்குத் தெரிந்து விட்டது. ஆனால் அதைப் பற்றி மகளைக் கேட்டு நச்சரிக்காமல் அவள் முகம் கோணுமலிருக்க, சதா ஏதேனும் அனுப்பிக் கொண்டே யிருந்தனர். நெல்லாய் வரும், புளியாய் வரும், துவரையாய் வரும் — இப்படி அவர்கள் பண்ணையில் விளைந்த பொருள்கள் யாவும் வரும். இவ்விதம் ராதை பாலுசாமி வீட்டு 'மகாலட்சுமி'யாக இருந்தாள்.

இது மட்டுமின்றி, ராதையின் பெற்றோர்கள் வெகு கஷ்டப்பட்டு ராதையின் புருஷன் ராஜத்துக்கு ஐதராபாத்தில் ஒரு வேலை தேடிக் கொடுக்கவும் செய்தனர். பாலுசாமிக்கும், அவர் மனைவி ரத்தினம்மாளுக்கும் தங்கள் மகன் தூரதேசம் போவது அவ்வளவாய்ப் பிடிக்கவில்லை. ஆயினும் ஒரு வேலை கிடைக்கிறதே என மகிழ்ந்து முதலில் ராஜத்தை மாத்திரம் அனுப்பி வைத்தனர். ராதை அவர்களிடமே இருந்தாள். தூர தேசத்தில் அவசரப்பட்டுக் கொண்டு சிறு பெண் மூதன் முதலில் போக வேண்டாம் என்று சாக்குப் போக்குச் சொல்லி வந்தனர்!

இப்படிப் பாலுசாமிக்குத் தன் தமக்கையைப் பற்றிய கவலையோடு, தன் மகன் தூர தேசத்தில் சௌக்கியமாக இருக்க வேண்டுமே என்ற கவலையும் சேர்ந்து கொண்டு அவரை வாட்டி வந்தது.

ஒருநாள் தந்திச் சேவகன் வந்து 'சார் தந்தி!' என்று குரல் கொடுத்ததும் பாலுசாமி திடுக்கிட்டார். பயத்தால் அவர் முகம் வெளுத்து விட்டது. கைகள் நடுங்கித் தந்தியைப் பிரித்துப் படித்தார்.

"அனந்தன் மாமா நிலைமை வெகு அபாயம். உடனே புறப்பட்டு வரவும்.—சங்கு." என்றிருந்தது. இதைப் படித்த பின்புதான் அவருக்குத் தம் சுய நினைவு வந்தது. மனம் சாந்தமடைந்தது. ஆனால் அடுத்த நிமிஷம் தாம் எதிர்பார்த்தபடி தங்கள் அமைதி கலைந்துவிடப் போகிறதே என வருந்தினர். அவருடைய மனம் எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணியது.

இவைகளை அவர் மனைவி உள்ளே இருந்தபடியே கவனித்துக் கொண்டிருந்தாள். பாலுசாமி அவளை நெருங்கி விஷயம் சொல்லு முன்னரே அவள் தந்தி விஷயம் என்ன என்பதை ஊகமாகத் தெரிந்து கொண்டிருந்தாள். "அடியே, நம் மன அமைதி போயிற்று. அனந்தன் சாகப் போகிறானாம். பொன்னம்மா இங்கே வந்து கொண்டிருக்கிறாள்" என்று அவர் கேலியாகச் சொன்னார். ரத்தினம்மாளும் "ஆகா! பேஷாய் வரட்டும். காமிரா வுள்ளில் அக்காள் அமரட்டும். அக்காள் கடாட்சம் நமக்குக் கிட்டுகிறது. அவ்வளவுதானே!" என்றாள். ஆனால் ஒரு கோடிப் பொழுதில் பாலுசாமியின் மனம் ஏனோ தூய்மை பெற்று, தம் தமக்கை அவளுடைய நல்ல நாட்களில் தங்களுக்குச் செய்துள்ள உதவிகளை எல்லாம் நினைவுப்படுத்திக் கொண்டது! ஆனால் அடுத்த வினாடி, அந்தோ! சுயபுத்தி வந்து மூடிக் கொண்டது.

*

உள்ளே அவர்களது பணக்கார மருமகள் ராதை வேலை செய்து கொண்டிருந்தவள் நடந்தவைகளைக் கண்டும் கேட்டும் ஆச்சரியமடைந்தாள். பொன்னம்மாளுக்காக மிகவும் பச்சாதாபப் பட்டாள். 'இப்படியும் மனிதர்கள் உண்டோ!' என வியந்து நின்றாள். அவள் மனம் பதறியது.

அனந்தசாமி ஒரு காலத்தில் நல்ல அந்தஸ்திலிருந்தார். ஆனால் தற்போது விதிவசத்தால் பரம ஏழையாகி விட்டிருந்தார். பாலுசாமி கொடுத்துத்தான் அவர் ஜீவனம் நடந்து வந்தது. அவர் ஊதாரியாகவிருந்து ஓட்டாண்டியாகிவிட்டதாகச் சதா பாலுசாமியும், ரத்தினம்மாளும் ஏசும் ஏச்சுக்கு ஒரு அளவேயில்லை.

சில நாட்களுக்குப் பின் மற்றோர் தந்தி வந்தது. அதில் 'அனந்தசாமியின் உடம்பு தேவலை' என்றிருந்தது. இதைப் பார்த்ததும் "அவர்களுக்குச் சோற்றுக்குத் தாளமாயிருந்தாலும் தந்தி - தர்பாருக்குக் குறைச்சலில்லை" என்று பாலுசாமியும் ரத்தினம்மாளும் கேலி செய்தனர். இந்தச் சமயத்தில் மறுபடி ஒரு தந்தி வந்தது. போதாத காலத்துக்கு அடையாளமாக அந்தச் சமயம் பாலுசாமி வெளியே சென்றிருந்தார். தந்திகள் அனந்தசாமியைப் பற்றித் தானிருக்கும் என்ற தீர்மானமான எண்ணத்துடன் ரத்தினம்மாள் அதை வெறுப்புடன் எங்கோ வைத்து விட்டாள். பிரித்துப் பார்க்க அவசரப்படவில்லை. பிறகு மறந்தும் போனாள். பாலுசாமி மறுநாள் அதைக் கண்டு பிடித்துப் பார்த்ததும் 'ஐயோ' என்று அலறினார். அடித்துக் கொண்டு அழலானார். "ராஜத்துக்கு டைபாயிடு ஜுரம் — அபாயகரமான நிலைமையிலிருக்கிறான்" என்று ஐதராபாத்திலிருந்து வந்த தந்தியைப் படிக்காமல் ஒரு நாள் காலதாமதமாகி விட்டது. மறுநாள் ரயிலில் இடமும் கிடைக்கவில்லை. அதற்கடுத்த தினம் புறப்பட்டு ஐதராபாத் போய்ச் சேருவதற்குள் மூன்று நாட்களாகி விட்டன. அதற்குள் ராஜம் தன் பெற்றோரையும் இளம் மனைவியையும் விட்டு இறந்தே போனான். தாங்க முடியாத துக்கத்தால் குடும்பம் களையிழந்து போயிற்று. அவர்கள் வீட்டு மகாலட்சுமியாய் விளங்கிய ராதையும் தன் பிறந்தகம் சென்றாள்.

பாலுசாமியின் குடும்பத்துக்கு நேர்ந்த தாங்கொண்ணாத துக்கம் சற்று ஆறின பிறகு அவருடைய இரண்டாம் மகனுக்குக் கலியாணமாகி இளைய மருமகள் வீட்டுக்கு வந்திருந்தாள். இதன் பிறகே அனந்தசாமி கண் மூடினார். அவர் காமமிக்குச் சென்றது பொன்னம்மாளுக்குப் பல விதத்தில் சௌகரியமாயிருந்தது. பிறகு பெரிய நரகத்தில் பிரவேசிப்பது போன்று அந்த அம்மாள் தன் தட்டு முட்டுச் சாமான்களுடன் பாலுசாமியின் வீட்டில் பிரவேசித்தாள்.

ஆரம்பத்தில் அவளே ஆச்சரியப்படும்படி விஷயங்கள் சௌகரியமாக இருப்பதுபோல் பட்டன.




## இயற்கை உணவு!

## ஊட்டுவதின் உயர்வை அன்னை அறிவாள்

அவன் அன்பான பாப்பா — ஒரு அழகிய கறுகறுப்பான குழந்தை! அவன் அதிர்ஷ்டசாலியுங்கூட, ஏனெனில், அவன் வாழ்வின் சிறப்பான துவக்கத்தை அன்னையின் முன்யோசனையில் விட்டிருக்கிறான்.

குழந்தை பிறக்கும் என்று முதலில் தெரிந்தவுடன், தன் குழந்தைக்கு தாராளமான தாய்ப்பாலை ஊட்ட, அன்னை ருசிமிக்க "ஓவல்டின்" பருக ஆரம்பித்தாள். அதனால்தான் குழந்தை அப்படி நன்கு வளர்ந்தது — அன்னை அவனுக்கு இயற்கை முறையில் உணவு ஊட்ட முடிந்தது!

தரத்தில் சிறந்த பார்லிமால்டின் போஷாக்குச் சத்து, சுத்தமான க்ரீம் பசும்பால், பிரத்யேகமாகத் தயாரிக்கப்பட்ட கொக்கோ, இயற்கைச் சத்துக்களான பாஸ்பேட்கள், வைட்டமின்களை பதமாகக் கலந்து தயாரிக்கப்படும் உணவே "ஓவல்டின்". இத்துடன் B & D வைட்டமின்கள் சேர்க்கப்பட்டு அபரிமிதமான சத்து மிகுந்ததாக இருக்கிறது.

'ஓவல்டின்' போன்று வேறொன்றும் இல்லை, ஒவ்வொரு தாயும் இதை விரும்புகிறாள்!

# ஓவல்டின்




**தாயையும் குழந்தையையும் போஷிக்கிறது**

விநியோகஸ்தர்கள் :

கிரஹாம்ஸ் ட்ரேடிங் கோ., (இந்தியா) லிட்.,

ரேடியோ ஸிலோனில் "ஓவல்டின்" அமெச்சூர் நேரங்களை (அிந்தி 41.72 மீட்டர்கள்) சனிக்கிழமைகளில் இரவு 8 முதல் 8-30 மணிவரை கேளுங்கள்.

IV. 441

பொன்னம்மாள் தானே சமையலில் புகுந்து ருசி ருசியாகச் சமைப்பாள். பாலுசாமியும் குழந்தைகளும் சாப்பிடுகையில் இவளையும் சாப்பிடக் கூப்பிடுவார்கள். பகற் சாப்பாடு முடிந்து சற்று இளைப்பாறிய பின் மறுபடி பொன்னம்மாள் ருசி ருசியாகச் சிற்றுண்டி தயாரிப்பாள். குழந்தைகளுக்குக் கொடுத்துத் தானும் சாப்பிடுவாள். அதன் பிறகு உள்ள வேலைகளைப் 'பாமா' பார்த்துக் கொள்ளுவாள். ரத்தினம்மாள் அவளிடம் முகம் கொடுத்து அன்புடன் பேசாவிடினும் தொல்லை கொடுக்காம லிருக்கிறாள் எனத் தோன்றியது.

இந்த அமைதி வெகுநாள் நீடிக்கவில்லை. வரவர 'இன்று என்ன சமையல்' என்று கேட்டால், 'ஆகா என்ன வேண்டுமானாலும் செய்யலாமே—பாயசம்—பரமான்னம்—பத்துவகைக் கறிகள் எல்லாமே செய்யலாம்' எனக் குத்தலாகப் பதில் வரும். சூது வாதற்ற பொன்னம்மாள் ஒரு நாள் அந்த வார்த்தையை உண்மை என்று நம்பிப் பெரிய விருந்து தயாரித்து விட்டுப் பட்ட அவமானம் சொல்லும் தரமல்ல. குழந்தைகள் சிற்றுண்டி நேரத்தில் பொன்னம்மாளைச் சுற்றிச் சுற்றி வருவார்கள். "என்ன பலகாரம் செய்வது!" என்றால், 'என்ன வேண்டுமானாலும் செய்யலாமே—வயிற்றை வண்ணான் தாழியாக்கிக் கொண்டே போனால் அதை நிரப்பச் சுமையைத்தான் காணோம்' என்று பதில் வரும். சமையல் சுறுசுறுப்பாய் நடந்து கொண்டிருக்கும். ரத்தினம்மாள் திடீர் பிரவேசமாக வருவாள். "ஏதுக்கு இவ்வளவு பருப்பு—ஏதுக்கு இவ்வளவு எண்ணெய்!" என்று ஏதேதோ கேட்ட வண்ணம் கடுகு டப்பா—மிளகு டப்பா இவைகளை யெல்லாம் திறந்து, ஏதோ செய்து, என்னமோ கோட்டம் பார்ப்பாள். "இது என்ன பிள்ளையில்லாத வீடா! எல்லோருமே ஓட்டாண்டியாக முடியுமா!" என்பாள். வரவரச் சாமான்களை யெல்லாம் பூட்டி வைத்துக்கொண்டு அவ்வப்பொழுதுக்கு வேண்டிய அளவே எடுத்துத் தருவாள். பணக்கார நண்பர்களிடம் வீட்டில் சமையல்காரி வைத்திருப்பதாகச் சமய சந்தர்ப்பத்துக் கேற்றபடி சொல்லிக் கொள்ளுவாள்.

கொல்லையில் விட்ட காய்கறிகளையும் அளந்து தரப்பட்ட சாமான்களையும் கொண்டு சமையல் செய்தால் அது நாலு பேருக்குத்தான் காணும். குழந்தைகள் முதல் பந்தியில் அடித்துப் பிடித்து, இருப்பதை யெல்லாம் ஒரு கை பார்த்து விடும். 'பிற்பாடு ஜலம் சேர்த்துச் சேர்த்து நீரவ வேண்டியதுதான். கடைசியில் சாப்பிடுகிறவர்களுக்கு அநேகமாய்ச் சோறும் தண்ணீரும் தான் மிஞ்சும். இப்படிப் போதாமலிருக்கிறதே என்றால் 'ஒவ்வொருவரும் இரண்டு மூன்று தரம் சாப்பிட்டால் அரிசி வாங்கிக் கட்டுப் படியாகுமா! இது என்ன பிள்ளையில்லாத வீடா!' என்று இரைவாள் ரத்தினம்மாள். இளைய மருமகள் பாமா பசி பொறுக்க மாட்டாமல் சில சமயம் திருடிச் சாப்பிட்டு விட்டுத் தண்ணீர் சேர்த்து விடுவாள். அந்தப் பழியும் பொன்னம்மாள் மீதே வந்து விழும். அவளுக்கு வரவர என்ன செய்வதென்பதே தெரியாமல் விழித்தாள். சமீபகாலம் வரை 'சிறுமை' என்பது என்னவென்றே அறிந்திராத பொன்னம்மாளுக்கு வர வர ஒருவேளை காப்பி கிடைப்பதுகூட அதிசயமாகி விட்டது. தலைக்குச் சொட்டு எண்ணெய் அகப்படாது. எல்லாம் பூட்டியும் ஒளித்தும் வைக்கப்பட்டிருக்கும். வெந்நீரில் ஸ்நானம் செய்தால்தான் பொன்னம்மாளுக்கு உடம்பு வலி தீரும். ஆனால் வெந்நீர் கிடைக்காது. இதற்குப் பொன்னம்மாள் ஒரு யோசனை செய்தாள். தாழ்வாரத்தில் கற்களை வைத்து அடுப்பை மூட்டிக் காப்பிப் பொடி—சர்க்கரை—பால் தனியே வாங்கி காப்பி போட்டுச் சாப்பிட்டு விட்டு வெந்நீர் காய வைத்துக் கொண்டு ஸ்நானம் முடித்துக்கொள்ள ஆரம்பித்தாள். ஆனால் ரத்தினம்மாள் அவளை எந்த வழியிலும் போக விடாமல் தொந்தரவு செய்து வந்தாள்.

புழக்கடையிலே பெரிய தென்னந் தோப்பு உண்டு. அதில் விழும் மட்டைகள் ஏராளம். அதிலிருந்து மண்ணில் விழுந்து மடிந்து போகும் மட்டைகளை அவைகள் அப்படியே மக்கினாலும் மக்கலாமே தவிரப் பொன்னம்மாள் எடுத்து உபயோகிக்கக் கூடாது. பொன்னம்மாள் பிற்பாடு விறகுகூட வாங்கிக் கொண்டு பார்த்தாள். அவைகளும் காணாமற் போகும். வீட்டிலுள்ள எந்தச் சாமானையும் தொடக் கூடாது. வாங்கி வைத்துக் கொண்டாலும் திருட்டுப் போய்விடும். இப்படி விவகாரங்கள் பொன்னம்மாள் சகிக்க முடியாத அளவுக்கு மேல் போய் விட்டன. இப்பொழுதெல்லாம் புலி சிங்கம் வாழும் அடர்ந்த காட்டில் வாழ்வது போன்றதொரு உணர்ச்சி அவளுக்கு உண்டாகத் தொடங்கியது.

★

அந்த ஊரிலும் பொன்னம்மாளுக்கு அனுதாபிகள் இல்லாமலில்லை. ஆனால் அவர்கள் அவளுக்கு உதவி செய்யப் பயந்து சும்மா இருந்தனர். பாலுசாமியிடமும் ரத்தினம்மாளிடமும் தகராறு வைத்துக் கொள்ள விரும்பாம லிருந்ததே அதற்குக் காரணம். ஒருவர் மாத்திரம் ஒருநாள் அவளிடம் "நீயேன் அம்மா இந்த வயதில் அரக்கர்களிட மிருந்து அவதிப்படுகிறாய்! பட்டணத்தில் போய்ப் பிச்சையாவது எடுக்கலாமே!" என்று தைரியமாகச் சொன்னார். அந்த ஆலோ



சனை அவளுக்குச் சரியானதாகப்பட்டது. அதைக் காரியத்தில் நிறைவேற்றவும் தீர்மானித்தாள்.

ஒருநாள் தம்பியிடம் "ஏண்டா பாலு, நான் பட்டணத்துக்குப் போய்த் தூர பந்துக்களை ஒரு தரம் பார்த்துவிட்டு வருகிறேன்!" என்றாள். பாலுசாமிக்கு அது விஷயம் சிறிதும் சிரத்தையில்லாமலிருந்தது. மறுபடியும் மறுபடியும் பொன்னம்மாள் தூண்டவே, "போய் வா—பேஷாய்ப் போய் வா! ஆனால் அங்கே போய் எல்லோரிடமும் பிதற்றிக் கொண்டிராதே" என்றார். 'சரி, ரயில் சார்ஜு கொடுப்பாயா!' என்று கேட்டாள். பாலுசாமி பணம் என்றதும் கையை விரித்தார்.

பொன்னம்மாளின் மண்டை விரு விரு என்று வேலை செய்தது. சரேலென உள்ளே சென்று தனது மூட்டை முடிச்சுகளைக் கட்ட ஆரம்பித்தாள். தனது தட்டு முட்டுச் சாமான்களைத் திரட்டலானாள். ஆனால் அதற்குள் ரத்தினம்மாளுக்கு விஷயம் தெரிந்து போயிற்று. ஒரே ஆவேசமாகக் கிளம்பி விட்டாள். எந்தச் சாமானையும் பொன்னம்மாள் தனது என்று தொட முடியாதென்றும் அப்படி ஏதாவது அவளது என்பது இருந்திருந்தால் அது இதுவரை சாப்பிட்ட சாப்பாட்டுக்குச் சரியாய்ப் போய் விட்டதாகவும் 'ஓ' வென்று கத்தத் தொடங்கி விட்டாள். அவளது உத்தரவுப்படி அவளது பிள்ளைகள் திரட்டிய சாமான்களை ஒவ்வொன்றும் ஒவ்வொரு சாமானாக இழுத்துக் கொண்டு போய் விட்டனர். பொன்னம்மாள் ஏதும் செய்வதற்கு இயலாதவளாகி விட்டாள்.

மறுநாள் பொன்னம்மாள் தன்னிடம் அனுதாபத்துடனிருந்த ஓர் இடையர் வகுப்புப் பெண்ணிடம் சென்று தன் தாலியை அடகு வைத்துச் சிறிது பணம் பெற்றாள். பொன்னம்மாளின் துக்ககரமான முகத்தைக் கண்டதுமே அந்த அனுதாபம் மிகுந்த பெண், "ஏனம்மா, நீங்கள் சாப்பிடக்கூட இல்லை போலிருக்கிறதே! சிறிது பாலாவது சாப்பிடுங்கள்!" என்று உபசரித்து அனுப்பினாள். பொன்னம்மாளுக்கு அவள் தான் தன் உற்ற உறவினள்போல் தோன்றியது. பணத்தைக் கண்டதும் பாலுசாமி பொன்னம்மாளை ரயிலேற்றி விட்டார்.

*

பட்டணம் சேர்ந்ததும் பொன்னம்மாள் ஒவ்வொருவர் வீடாய்த் தூர பந்துக்களிடமெல்லாம் சென்று யாசித்தாள். ஒருவரும் அவளுக்குச் சாசுவதமான உதவி அளிக்க முன் வரவில்லை. சொற்ப உதவி செய்தும் ஆறுதல் சொல்லியும் அனுப்பி விட்டார்கள். பொன்னம்மாளுக்கு ஆறுதல் சொல்லே போதுமானதாயிருந்தது.

பிற்பாடு அவள், தான் எண்ணி வந்தபடி பாலுசாமியின் மூத்த மருமகள் ராதையிடம் சென்றாள். ராதையின் பெற்றோர் காலமாகி விட்டிருந்தனர். அவள் தன்னுடைய சகோதரர்களின் ஆதரவில் இருந்து வந்தாள். அவர்கள் பட்டணத்தின் பெருத்த தனவந்தர்களாய் வாழ்ந்து வந்தனர். பொன்னம்மாள் பெரியதொரு மாளிகையின் முன் நிற்கவே, அங்கே நின்ற காவலாளிகள் அவளை, "போ அம்மா! இங்கே என்ன வேலை?" என்று ஏசினர். சில வேட்டை நாய்கள் அவளைப் பார்த்துக் குரைக்கத் தொடங்கின. தோட்டத்தில் வேலை செய்து கொண்டிருந்த தோட்டக்காரர்கள் அங்கு மிங்குமாக இருந்தவர்கள் ஒன்று இரண்டு சத்தம் என்னவென்று கவனிக்க ஆரம்பித்தனர். பொன்னம்மாள் இவ்வித ஆடம்பரமான வாழ்க்கையைக் கதை-நாவல்களில் தான் படித்திருக்கிறாளே தவிர, நேரில் பார்த்ததில்லை. அவள் அவ்விடத்தை விட்டு நகராமல் விடாப்பிடியாய் இருக்கவே ஒரு காவலாளி அவளை யாரைப் பார்க்க வேண்டுமென்று விசாரித்தான். பொன்னம்மாள் தான் ராதையம்மாளைப் பார்க்க வந்திருப்பதாகவும் தூரபந்து என்றும் சொல்ல, விஷயம் ராதையம்மாளுக்குத் தெரிவிக்கப் பட்டது. ராதை வந்திருப்பது யாராயிருக்கும் என்று வெகுவாக யோசித்தும் தெரியாமல் பெயரைக் கேட்டுத்தான் யார் என அறிந்தாள். உடனே அவளுக்குப் பழைய நினைவு வந்து துக்கமுண்டாயிற்று. தன்னை மெதுவாகச் சமாளித்துக் கொண்டு பொன்னம்மாளை உள்ளே அழைத்து விசாரித்தாள். அவ்வளவு அன்பாகப் பொன்னம்மாளை அதுவரை யாருமே விசாரித்ததில்லை. அவளது உள்ளம் வேதனையில் வெந்து உழன்று கொண்டிருந்த அந்தச் சமயம் ராதை காட்டிய பரிவு அவளுக்கு மிக்க ஆறுதலாயிருந்தது. ஆகவே அதற்குமேல் தனது உள்ளத்திலுள்ள மனக் கஷ்டத்தை அங்கேயே புதைத்து அடக்கம் செய்ய விரும்பாமல், எல்லாவற்றையும் வாய் விட்டுச் சொல்லித் துக்கம் தாங்காது பச்சிளம் குழந்தையைப் போல் அழ ஆரம்பித்து விட்டாள்.

அதற்குள் ராதையின் மதனிகளில் ஒருத்தி தன் சிறு மகனை அங்கே அனுப்பி உள்ளே என்ன நடக்கிறதென்று, வேவு பார்த்துவரச் செய்தாள். அந்தக் குழந்தை ஒரு நிமிடம் ராதையின் அறையில் தங்கியிருந்து திரும்பிச் சென்று



# அணையா விளக்கு

பம்பாய் நகருக்கு அருகிலுள்ள
டிராம்பேயில் ஸ்தாபிக்கப்படும்
பர்மா – ஷெல்லாரின் ரிபைனரி
இந்தியாவிலேயே மிகப் பெரி
யது. இங்கு பிரதிவருஷம்
20 லக்ஷம் லாந்தர் விளக்குகள்
வருஷம் பூராவும் இடைவிடாமல்
எரிவதற்குப் போதுமான
மண்ணெண்ணெய் தயாரிக்கப்படும்.

பர்மா-ஷெல் ... பாரதநாட்டின் வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கிறது.

தன் தாயிடம் "அம்மா, யாரோ ஒரு பிச்சைக்காரி அத்தைக்குச் சமானமாக அத்தையைக் கட்டிக்கொண்டு அழுகிறாள்!" என்றது. அந்தக் குழந்தையின் சொல் பொன்னம்மாள், ராதை இருவருக்குமே கேட்டது. பொன்னம்மாளை ராதை ஏதோ சமாதானம் செய்து அனுப்பி வைத்தாள். அவள் ஊருக்குத் திரும்பினதும் அங்கே அவளது நிலைமை இன்னும் சொல்ல முடியாத அளவுக்கு மோசமாகி விட்டது.

★

பொன்னம்மாள் பட்டணத்திலிருந்து திரும்பி வந்தது முதல் சதா துக்கத்துடன் அழுத வண்ணமிருந்தாள். தன்னந் தனியளாகிய அவளுக்கு உலகம் கசந்து விட்டது. உலகத்து மனிதர்கள் எல்லோருமே பொல்லாதவர்கள் எனத் தோன்றியது. அவள் மனத்தில் ஒரு வெறுப்பு குடியேறியது. ஒரே ஏக்கமாயிருந்து வந்தாள். அனேக நாட்கள் சாப்பிடாமலேயிருப்பாள். சில சமயம் தான்செய்வது என்னவென்பதே தெரியாமல் இருப்பாள். அந்த வீட்டில் பாமா ஒருத்தி தான் யாருக்கும் தெரியாமல் அவளிடம் அன்பாயிருப்பாள். பேசுவாள். பட்டணத்துச் செய்திகளை விசாரிப்பாள். ஆவலுடன் தன் ஓரகத்தி என்ன சொன்னாள், என்ன கொடுத்தாள், எப்படியிருக்கிறாள் என்றெல்லாம் கேட்பாள்.

ஒரு நாள் பொன்னம்மாள் தெருத் திண்ணையில் பசியினால் களைத்துப் போய்ப் படுத்திருந்தாள். அச்சமயம் தபால்காரன் வந்து அவள் பெயருக்குச் சிறு தொகை வந்திருப்பதாகச் சொன்னான். உடனே செய்தி பாலுசாமி ரத்தினம்மாள் வரை எட்டியது! பொன்னம்மாளுக்கு ராதை சிறிது பணம் அனுப்பியிருந்தாள்! இரைச்சல் பலமாகி வீட்டில் ஒரு சிறு பூகம்பம் போன்றதொரு பூசல் உண்டாகி விட்டது. பாலுசாமியும் ரத்தினம்மாளும் கூ, கூ எனக் கூவ ஆரம்பித்து விட்டனர். 'பட்டணம் போய் உறவு சம்பாதித்துக் கொண்டு வந்து விட்டாளாக்கும்! சொந்த மாமனார் மாமியார் என்ன கதியிலிருக்கிறார்கள் என்ற ஒரு சொல்லைக் காணோம், யாரோ கிழவிக்கு இல்லாத பரிதாபம்!' என்று இரைய ஆரம்பித்து விட்டனர். முடிவு பொன்னம்மாளின் அன்றையச் சாப்பாட்டில் மண் விழுந்தது — அவ்வளவுதான்!

பொன்னம்மாளுக்கு அன்று மிகவும் குழப்பமாக இருந்தது. ஆரம்பத்தில் இருந்த தெளிவு வரவர இருக்கவில்லை. அவர்கள் சொல்வதே புரியவில்லை. ஆனால் ஒருவித பயமுண்டாயிற்று. அவ்விடத்தை விட்டு அப்பால் செல்லப் பிரயத்தனப் பட்டாள். அன்றிரவு பொன்னம்மாளை யாரோ தட்டி எழுப்பின மாதிரி உணர்ச்சி அவளுக்கு ஏற்பட்டது. அவள் திடுக்கிட்டு எழுந்தாள். எதிரே பாமா ஒரு சிறு கிண்ணத்தில் சோறுடன் நிற்பது தெரிந்தது. "அத்தை, இதைச் சீக்கிரம் சாப்பிட்டு விடுங்கள், மாமிக்குச் சாதத்தைப் பூனை உருட்டி விட்டதாகச் சொல்லிச் சமாளித்துக் கொள்கிறேன்" என்று காதோடு சொன்னாள்.

பொன்னம்மாளுக்கு மனம் ஒரு கணப்பொழுது தெளிவுற்றது. பாமாவைக் கட்டி அணைத்துக் கொண்டாள். ஆனால் அந்த சிறு சாதத்தை அவள் சாப்பிடவில்லை. சிறு உள்ளத்திலிருந்து வெளி வந்த அன்பு அவளது பசியை அகற்றி விட்டது!

மறுநாள் பொன்னம்மாளின் மூளை குழம்பிப் போயிருந்தது. பாலுசாமியே அதிர்ச்சியடைந்து விட்டார்! இப்பொழுதெல்லாம் அவளை யாரும் துன்புறுத்துவதில்லை. பாலுசாமியும் அன்பு காட்டலானார். அவரிடம் பயமின்றி, ஊராரும் பொன்னம்மாளிடம் பிரியமாகவும் ஆதரவுடனும் இருக்கலாயினர். ஆனால் இனி அவளுக்கு என்ன தேவை! அவள்தான் முற்றும் துறந்த முனிவருக் கொப்பாகி விட்டாளே!

அவள் அடிக்கடி தபால் நிலையம் சென்று, "ஏன் ஐயா! எனக்கு ஏதாவது பணம் வந்திருக்கிறதா!" என்பாள். தபால் அதிபர் சில சமயங்களில் பொறுமையை இழந்து, "அட எனம்மா—வேலையில்லா வேளையில் வந்து உயிரை வாங்குகிறாய்!" என்று கோபிப்பார். ஆனால் பொன்னம்மாள் மெல்லச் சிரித்து, "வந்திருக்கும் பார்" என்பாள்.

"ஆமாம், உன் பிள்ளையாண்டான் அனுப்பியிருக்கிறான்" என்பார் அவர்.

"ஆமாம்"—என்பாள் அவள்.

உண்மையில் அவளுக்கு ராதை இப்பொழுதெல்லாம் மாதா மாதம் ஏதோ சகாயம் செய்து வந்தாள். அதைப் பெற்றுக் கொள்ளும் அளவுக்குப் பொன்னம்மாளுக்கு அறிவு இருந்தது; ஆனால் அதன் உபயோகம் என்னவென்பது அவளுக்கு மறந்து போய் விட்டது.

## வட நாட்டில் தமிழ்க் கொடி

வட நாட்டில் தமிழர் பண்பாட்டையும், தமிழ் மக்களின் 'கலைகளையும் வளர்த்துப் போற்றி வரும் சங்கங்களில் பம்பாய் மாகாணத்திலுள்ள புஸாவல் தென்னிந்தியர் சங்கமும் ஒன்று என்பதைக் குறிப்பிட வேண்டும். சென்ற வருஷம் ஆகஸ்டு மாதம் ஆரம்பித்து இன்றைக்கு ஒரு வருஷம் பூர்த்தி செய்திருக்கிறது. இதற்குள் பல அலுவல்களை மேற்கொண்டு புஸாவலிலுள்ள தென்னிந்திய சமுதாயத்தின் பேராதரவைப் பெற்றுத் திகழ்கிறது. பல சங்கீதக் கச்சேரிகள், நடனங்கள், சமயப் பிரசங்கங்கள் பஜனைகள், முக்கியமான பண்டிகை நாட்களில் விசேஷ நிகழ்ச்சிகள், விளையாட்டுகள் இப்படிப் பல ஏற்பாடு செய்து வெகு வேகமாக முன்னேறி வருகிறது. இவ்வளவுக்கும் காரணம் சபையின் நிர்வாகப் பொறுப்பை மேற்கொண்டுள்ள தலைவர், உபதலைவர் காரியதரிசிகள் முதலியவர்களுடைய சுறுசுறுப்பும், ஊக்கமும் உற்சாகமுமே யாகும். ஓராண்டிலேயே இவ்வளவு சாதித்திருக்கிறது என்றால் இதன் எதிர்காலம் மிகவும் சிறந்து விளங்கும் என்பதில் என்ன சந்தேகம்?

# ஒரு கம்பீரமான ஸெட் சாதாரண விலையில்!

பார்வைக்கு சிறந்ததும் நீடித்து உழைக்கக் கூடியதும், நம்பிக்கை வாய்ந்ததுமான, இந்த ஸெட் ரேடியோக்களில் ஒரு மாணிக்கம். இதன் விலையும் சரஸமானதால் யாவரும் வெகுவாக விரும்புகிறார்கள். இன்றே வாங்கி அனுபவியுங்கள்!



## மர்பி ரேடியோ

## murphy radio

மாடல் டிபி 221.
ட்ரை பாட்டரியினால்
இயங்கும் நான்கு
வால்வு ஸெட்

மாடல் டி.ஏ.222
ஏ.ஸி.-ஐந்து
வால்வ் ஏ.ஸி. ஸெட்

மாடல் டியு-222
டி.ஸி/ஏ.ஸி-ஐந்து
வால்வ் டி.ஸி./ஏ.ஸி.
ஸெட்

விலை ரூ. 300/-

டிஸ்டிரிபியூட்டர்ஸ்:
அடிஸன் அண்டு கம்பெனி லிட்.,
158, மவுண்ட் ரோட் மதறாஸ்-2.

மர்பி ரேடியோ ஆப் இந்தியா, லிமிடெட், பம்பாய்-12.

EVEREST MR-54-23 TA.




ஆர். சூடாமணி

கடைசியாகத் தன் கையிலிருந்த பதுமையைப் பார்த்தாள் கௌரி.

இன்று அது எவ்வளவு அழகாய்க் காட்சியளித்தது! ஆழ்ந்த சிந்தனையிலிருக்கும் ஒரு பெண்ணின் உருவம் அது. அதைவிட ஆழ்ந்த சிந்தனையும் உணர்ச்சியும் அப்போது கௌரியின் பார்வையில்தான் காணப்பட்டன.

அவள் உடல் ஒரு தரம் துடித்தது. நீண்ட பெருமூச்சு ஒன்று குமுறி யெழுந்தது. கண்களில் கண்ணீர் மல்கியது. திடீரென்று தன் அருமைச் சிற்பத்தை மார்புடன் சேர்த்து அணைத்துக் கொண்டாள்.

உயிரினும் மேலான அந்தப் பதுமையை அவள் எப்படி விட்டுவிட முடியும்? வேலையையும் வறுமையையும் பொருட்படுத்தாமல் உற்சாகம் மிகுந்த தன் கற்பனைத் திறனை அவள் அந்தச் சிறிய உருவத்தின் மீது அல்லவா கொட்டி யிருந்தாள்?

ஆனால் வேறு வழிதான் என்ன? வாங்கிய கடனில் ஒரு சிறு தொகை பாக்கியிருந்தது. வாழ்க்கைக்கும் மரணத்துக்கு மிடையே ஊசலாடிய தாயின் சிகிச்சைக்காகத் தன் சக்தியை மீறிப் பணம் வாங்கி விட்டாள். அந்தத் தாயும் இப்போது உலகில் இல்லை.

அவளை நினைத்து, கௌரியின் உள்ளம் ஏங்கியது. இன்று இந்த மற்றொரு வேதனை அவளை நிலை தவறிப் புலம்பச் செய்தது. அவள் சிற்பத்தின் மகிமையை யார் தெரிந்து கொள்ளப் போகிறார்கள்? அதை வாங்குபவர்கள், அதைச் செய்தவள் கலையில் தனக்குள்ள ஆர்வத்துக்கும், சோர்ந்திருக்கும் தன் உள்ளத்தின் ஆறுதலுக்கும் சின்னமாக அந்தச் சிற்பத்தை உருவாக்கினாள் என்பதை எப்படித் தெரிந்து கொள்வார்கள்?

கௌரியின் இளம் தம்பி, "அக்கா! நீ இப்படி வருத்தப்பட்டு நான் பார்த்ததேயில்லை. அந்தப் பொம்மையை விற்றுவிடப் போகிறாயா?" என்றான்.

"விற்கத்தான் வேண்டியிருக்கும்போல் தோன்றுகிறது."

"உனக்கு இது ரொம்ப இஷ்டமான பொம்மை யாயிற்றே! வேறு ஏதாவது சாமானை விற்றால் என்ன?"

"நம்மிடம் விலையுயர்ந்த பொருள் வேறு என்ன இருக்கிறது?"

இதைச் சொல்லும்போது துயரம் தேங்கியிருந்த அவள் கண்களில் ஒரு பெருமையும் காணப்பட்டது. ஆம், அவள் சிருஷ்டி விலை உயர்ந்தது என்பதை யார் மறுக்க முடியும்?

பெருமையை மீறிக் கொண்டு மறுபடியும் துயரம் முன் வந்து நின்றது. பெற்று வளர்த்த குழந்தையைப் பிரியும் தாயைப் போல் கௌரி மனம் நெகிழ்ந்து தன் சிற்பத்தின் மீது கண்ணீர் வடித்தாள்.

அன்று மாலை கடன் கொடுத்திருந்தவர் தமக்குச் சேர வேண்டிய மீதிப் பணத்தைக் கௌரியிடமிருந்து பெற்றுக் கொண்டார்.

கௌரி வழக்கம்போல் பாடம் சொல்லிக் கொடுக்கப் பள்ளிக் கூடம் சென்றாள். வழக்கம் போல் உண்டு உறங்கி உயிர் வாழ்ந்தாள். அவள் உள்ளத்தில் மட்டும் ஒரு இடம் காலியா யிருந்தது.

பள்ளிக் கூடத்துக்குப் போகும் வழியிலேயே இருந்தது அவள் சிற்பத்தை வாங்கியவர்களின் வீடு. முன் புறத்து ஜன்னல் வழியாகப் பெரிய அறை ஒன்று தெரிந்தது. ஒவ்வொரு நாளும் போகும்போதும் வரும்போதும் கௌரி சற்றுத் தயங்கி அந்த அறையைப் பார்ப்பாள். ஒரு வேளை உட்புறமிருந்த

அவள் சிற்பத்தை ஏதோ காரணம் பொருட்டு அந்த அலங்காரமான முன்னறையில் கொண்டு வந்து வைத்தால்......!

ஒவ்வொரு நாளும் அந்தத் தெரு வழியே காலையும் மாலையும் ஒரு அநாதை இளம் பெண் போய் வருவதையும் அவள் ஒரு வீட்டினெதிரே தயங்கி நிற்பதையும் பலர் பார்த்தார்கள். ஆனால் நம்பிக்கையும் ஆவலும் மலர ஆரம்பித்து மங்கிப் போகும் அவள் கண்கள் கூறிய மௌனக் கதையைக் கவனித்தது மட்டும் ஒருவன் தான்.

அவன் பெயர் பாலகிருஷ்ணன். அந்த வீட்டுக்காரரின் மகன். சிற்பக் கலையில் சிறிது பயிற்சி உள்ளவன். அதில் தனக்குள்ள ஆர்வத்தின் காரணமாகவே கௌரியின் சிருஷ்டியை மெச்சி அதை வாங்கும்படி பெற்றோரிடம் கூறியவன்.

தன் வீட்டினெதிரே ஏக்கமே உருவாக ஒரு பெண் நின்று பார்ப்பதை அவன் அடிக்கடி கவனித்தான். அவள் முகத்தில் குடி கொண்டிருந்த துயரம், அவலை, அதன் காரணத்தைத் தெரிந்து கொள்ளத் தூண்டியது.

கௌரியிடம் நேரே அவன் அதைக் குறித்துப் பேச முயன்றபோது அவள் பயத்துடன் பதில் சொல்லாமலே போய் விட்டாள். அவன் அத்துடன் நிறுத்தி விடவில்லை. அக்கம் பக்கத்தில் விசாரித்து அவள் வீட்டைக் கண்டு பிடித்தான். அங்கு கௌரியின் தம்பியைத் தனியாகச் சந்தித்துச் சிநேகம் செய்து கொள்ள அவனுக்கு நேரமாகவில்லை. பையன் வாயிலாகவே விஷயத்தைத் தெரிந்து கொண்டான்: "அந்த வீட்டில்தான் ஸார் என் அக்கா தான் பண்ணிய சிற்பத்தை விற்றாள். பாவம். அவளுக்கு அதன்மேல் உயிர். விற்கவே மனமில்லை. வேறு வழியில்லாமல்தான் விற்று விட்டாள்."

அன்று பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பிய போது கௌரியின் கால்கள் வழக்கம்போல் அவ் வீட்டினெதிரே ஒரு விநாடி தாமதித்தன. கண்களை உயர்த்த அவளுக்குப் பயம்.

கடைசியாகக் கௌரி தலை நிமிர்ந்தாள்; கண்களை உயர்த்தினாள்.

பார்த்தவள் கண்கள் அவ்விடத்திலேயே பதிந்து விட்டன. அவைகளில் முதலில் அவநம்பிக்கை, பிறகு ஆச்சரியம், கடைசியில் சொல்லுக் கெட்டாத இன்பம்! கௌரியின் அதரங்கள் புன்முறுவலிக்கத் தொடங்கின. அவள் முகத்தில் ஒளி பரவியது.

சிற்பத்தைச் செய்து முடித்த தினத்தில் கண்ட ஆனந்தத்தை விட அதை மறுபடி கண்டெடுத்த இன்று பதின்மடங்கு பேரானந்தம் அவள் கண்களில் பிரதிபலித்தது.

"அக்கா! நீ எவ்வளவு சந்தோஷமாயிருக்கிறாய்!" என்றான் தம்பி.

"வாழ்க்கையே சந்தோஷம்தான்! என் மனத்தில் சொல்ல முடியாத ஆனந்தம் பொங்கி யெழுகிறது. துன்பமென்பதே உலகில் இல்லை. எல்லாம் இன்பப் பூரிப்பு! தெய்வம் மனிதர்களுக்கு வேதனையை ஒரு போதும் கொடுப்பதில்லை. நமது எல்லா பிரார்த்தனைகளையும் நிறை வேற்றுகிறது. உலகமே ஒரு இன்ப மாளிகை!"

"திடீரென்று என்ன இப்படிப் பேசுகிறாய், அக்கா?"

"என்னவா?" கௌரி அவனருகில் வந்து ஒளி மிகுந்த தன் கண்களை விரித்து மெல்லிய குரலில் பேசினாள். "என் பதுமையைக் கொஞ்ச நேரத்துக்கு முன் பார்த்தேன்! கொஞ்ச நேரத்துக்கு முன்தான்! உன்னால் நம்ப முடிகிறதா? அந்த இடத்தில் சந்தியா ஒளி அவள் மேல் விழ என் சிற்ப மங்கைஎன்ன சௌந்தரியமாய் விளங்



கினாள் தெரியுமா? மங்கும் சூரிய கிரணங்களால் உருவாக்கப்பட்ட ஒரு கனவைப் போல் தோன்றினாள். அந்தப் பதுமையைப் பார்த்ததும் என் உடல் முழுவதும் சிலிர்த்துப் பூரித்தது. கண் கொட்டாமல் நேரம் போவது தெரியாமல் அதைப் பார்த்து ஆனந்தப் பட்டுக் கொண்டிருந்தேன். அதை நான் மறுபடியும் அடைய வேண்டாம், தொட வேண்டாம், கண்ணால் பார்த்தால் போதும், அதைப் பார்க்கும் இன்பம் இருந்தால் போதும், வாழ்நாள் முழுவதையும் நான் இன்பமாகவே கடத்தி விடுவேன்."

இந்த இன்பத்தில் பல நாட்கள் கடந்தன. அவள் கண்களில் படாமல் பாலகிருஷ்ணன் அவள் சுகத்தைக் கண்டு இன்புற்றிருந்தான்.

அன்று கௌரி வழக்கம்போல் அந்த வீட்டுப் பக்கம் கண்களைத் திருப்பியபோது ஜன்னல்களெல்லாம் மூடியிருப்பதைக் கண்டு திடுக்குற்றாள். திரும்பும்போது அவ்வீட்டு வேலைக்காரன் தன் நண்பனுடன் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டாள்.

"ஏண்டா ஒரு மாதிரி இருக்கிறாய்?" என்றான் நண்பன்.

"என்னத்தைச் சொல்லுவது! நேற்று ராத்திரி திருடன்கள் நம் வீட்டுக்கு வந்தார்களாம். நானோ தூங்கிக் கிட்டிருந்தேன். நம்ம நாய் குரைக்க ஆரம்பிச்சவுடனே ஓடிப் போயிட்டாங்களாம். நிறையச் சாமான் திருட்டுப் போச்சு..."

அவன் பேச்சை முடிப்பதற்குள் எஜமானர் கூப்பிடவே வேலைக்காரன் உள்ளே ஓடினான். இந்தச் சம்பாஷணையைக் கேட்டுக் கௌரிசிந்தனையிலாழ்ந்தாள்.

திருடர்களா? அந்த வீட்டுக்கு வந்து போனார்களா? என்னென்ன களவாடப்பட்டதென்று அந்த ஆள் சொல்லாமல் போய் விட்டானே! ஜன்னலையெல்லாம் அடைத்திருக்கிறதே!

அந்த வீட்டில் அவளுடைய பொக்கிஷமல்லவா இருந்தது!

'அது பத்திரமாயிருக்குமா? அதன் அழகைக் கண்டு அதை விற்றுப் பணம் சம்பாதிக்கலாம் என்ற நோக்கத்துடன் திருடர்கள் அதை எடுத்துப் போயிருந்தால்...?' அவள் உடல் ஒரு கணம் பதறியது.

'அதை இழந்து நான் என்ன செய்வேன்! ஒவ்வொரு நாளும் அதைப் பார்த்து வருவதில்தானே நான் இவ்வளவு சந்தோஷமாயிருக்கிறேன்! அது போய் விட்டால் என் வாழ்வு அர்த்தமற்றுப் போய் விடும்.'

இரவெல்லாம் இதே நினைவு. மறுநாள் பள்ளிக்கூடம் போகும் போதும் ஜன்னல்கள் மூடியிருந்தன. இந்த நிலை அவளைப் பைத்தியமாக்கி விடும்போலிருந்தது. மாலை வீடு திரும்பியதும் அசதி மிகுந்து படுக்கையில் படுத்துக் கொண்டாள்.



கௌரி வெகு நேரம் யோசித்தாள். தன் பதுமையைப் பற்றித் தெரிந்து கொள்ளாமல் அவளால் நிம்மதியடைய முடியவில்லை. அதற்கு என்ன ஆயிற்றென்று தெரியாத இந்த நிலை சகிக்க முடியாததாய் இருந்தது.

சிற்பம் என்றைக்குமே அவன் கண் முன்னிருந்து மறைந்து போய் விட்டதா?

'அது போய் விட்டால் என் உயிரும் கூடவே போய் விடும்' என்று துடித்தாள். சட்டென்று படுக்கையை விட்டு எழுந்தாள். என்ன வந்தாலும் வரட்டும், அந்த வீட்டுக்குள்ளேயே சென்று பார்த்து விடுவதென்று மனம் துணிந்து விட்டாள்.

'அது என்னுடையது தானே? பணம் கொடுத்து வாங்கி விட்டால் என் உணர்ச்சிகளையும் கூடவே வாங்கிவிட முடியுமா? அதை இழந்து விட்டால் அவர்களுக்கு ஒன்றுமில்லை. அதை உருவாக்கிய எனக்குத் தான் துயரம் வாழ்நாள் முழுதும் மறையாது' என்று எண்ணிக் கொண்டாள்.

இரவு சுமார் பத்து மணிக்கு, கௌரி தம்பியைத் தூங்கச் செய்துவிட்டு வெளியே கிளம்பினாள். அந்த வீட்டு வாசற் கதவு திறந்துதானிருந்தது. அறைக்குள் வெளிச்சம் இல்லை. ஆனால் வெளி வராந்தாவில் ஒரு விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அங்கு இரண்டு வேலைக்காரர்கள் தங்கள் படுக்கைகளை விரித்தபடியே சம்பாஷித்துக் கொண்டிருந்தார்கள். கௌரியின் மனம் 'படபட' வென்று மிகவும் வேகமாய் அடித்துக் கொண்டது.

"டேய், உள்ளே போய் அம்மாவிடமிருந்து வாசல் சாவியை வாங்கிவா" என்றான் ஒருவன். மற்றவன் உடனே எழுந்து உள்ளே சென்றான். வெளியில் இருந்தவன் ஒரு கொட்டாவியுடன் படுக்கையில் படுத்துக் கண்களை மூடிக் கொண்டான்.

அந்த விநாடியைத் தான் பயன்படுத்திக் கொள்ளாவிட்டால் தன் இதயத்தை வாட்டும் சஞ்சலம் தீராது என்று கௌரி தீர்மானித்துக் கொண்டாள்.

அது ஒரு ஆபத்தான சந்தர்ப்பம்தான். ஆனால் எவ்வளவு ஆபத்தானது என்பதைக் கௌரி தெரிந்து கொள்ளவில்லை. நடு அறைக்குப் பக்கவாட்டிலிருந்த நடையில் விளக்கு இல்லை. அந்த இருட்டிலேயே பாலகிருஷ்ணன் நின்று கொண்டிருந்தான். வெளி வராந்தாவிலிருந்து உள்ளே விழுந்த வெளிச்சத்தின் உதவியால் அவன் கௌரியின் சிற்பத்தையே அங்கிருந்து பார்த்துக் கொண்டிருந்தான். அவன் மனம் பாரமுற்றிருந்தது.

கௌரி சத்தமில்லாமல் அடிமேலடி வைத்துப் படுத்திருப்பவனைக் கவனித்தபடியே அறைக்குள் நுழைந்தாள்.

பாலகிருஷ்ணன் உள்ளம் நைந்து கொண்டிருந்தான். அவன் மனக் கண்ணில் ஒரு காட்சி திரும்பத் திரும்பச் சுழன்று கொண்டிருந்தது. பூர்த்தி யடையாத அவனுடைய ஒரு சிறு மண் பதுமை. அதை அழகு பெறச் செய்து முடிக்க அவனுக் கிருந்த ஆவல். "சாமி, ஞாபகம் இல்லாமல் உங்கள் பொம்மையைத் தரையில் வைத்து விட்டுப் போய் விட்டேனுங்க" என்ற வேலைக்காரனின் வார்த்தைகள், பொம்மை மேல் விழுந்த பலகை, தரை மட்டமாகிவிட்ட, உருத்தெரியாத மண் உருண்டை - இந்தக் காட்சி அவன் மனக் கண்ணை விட்டு அகலவேயில்லை. மறைந்து போன தன் பதுமையைத் தான் திரும்பப் பெற முடிந்தால்...! அப்போது அவன் புறக்கண்ணின் முன்பும் ஒரு ஆச்சரியமான காட்சி எதிர்பட்டது.

கௌரி சொல்ல முடியாத உவகையோடு ஓடிவந்து தன் பதுமையைக் கைகளுள் அணைத்துக் கொண்டாள்.

அப்போது இருவருக்குமே உணர்ச்சி மிகுதியால் உடல் சிலிர்த்தது.

கௌரி ஆனந்தத்தால் மெய் மறந்தாள். தன் சிலையை மூன்றும் முறையாகக் கண்டெடுத்து விட்டாள். அதைக் கண்ணால் காண்பேனா என்று ஏங்கியிருந்தவள் கண்டதன்றி அதை ஸ்பரிசித்தும் விட்டாள்! அவள் ஆனந்தம் எல்லை மீறிவிட்டது. அந்தச் சிற்பத்தை விட்டு அவள் இவ்வளவு நாள் எப்படிப் பிரிந்திருந்தாள்? திடீரென்று தன் சிற்பம் இல்லாமல் இனித் தன்னால் ஒரு கணமும் வாழ முடியாதென்ற ஒரு உணர்ச்சி அவளை வெறிபோல் பற்றிக் கொண்டது. அதன் நியாய அநியாயங்களைப் பற்றி யோசிக்கும் நிலையில் அவள் மனம் அப்போது இல்லை.

பதுமையைத் தன் கரங்களுள் நன்றாய் அணைத்தபடி கௌரி வெளியே காலெடுத்து வைத்தாள். படிகளையும் தோட்டத்தையும் தாண்டி வாசலை அடைந்து விட்டாள்.

அப்போது ஒரு நாய் பயங்கரமாகக் குரைக்க ஆரம்பித்தது.

"யார் அங்கே? நில்லு" என்றொரு குரல் கேட்டது. கௌரி திடுக்கிட்டுத் திரும்பினாள். படுத்திருந்த ஆள் இப்போது அவள் எதிரில் நின்று கொண்டிருந்தான்.

கௌரி அசைவற்றுப் பேச்சற்று நின்றாள். 'அகப்பட்டுக் கொண்டு விடலாமா? கூடவே

---

**பாரதி வாக்கு**

முதலாவது சிலருக்குச் சோறு மீத மிஞ்சி யிருக்க, பலர் தின்னச் சோறில்லாமல் மடியும் கொடுமையைத் தீர்த்து விட வேண்டும். இது இலக்கம் ஒன்று. பூமியின் மீதுள்ள நன்செய், புன்செய், தோப்பு, துரவு, சுரங்கம், நதி, அருவி குப்பை, செத்தை, தரை—கடவுளுடைய சொத்தில் நாம் வேலி கட்டக் கூடிய, பாகத்தை யெல்லாம்—சிலர் தங்களுக்குச் சொந்தமென்று வேலி கட்டிக் கொண்டனர். பலருக்கு ஆகாசமே உடைமை. வாயுவே ஆகாரம். இதற்கு மருந்து என்னவென்றால், "எல்லோரும் சமானம், அண்ணன் தம்பி போல" என்ற புத்தி உண்டாய் ஏழைகள் வயிறு பசிக்காமல் செல்வர்கள் காப்பாற்ற வேண்டும். இது முடியாவிட்டால்......நிலத்தை எல்லோருக்கும் பொதுவென்று ராஜ்ய விதி ஏற்பாடு செய்து கொள்ள வேண்டும்.

**பாரதி வாக்கு**

★ உலகத்திலுள்ள மதபேதங்களை வேருடன் களைந்து, சர்வ சமய சமரசக் கொள்கையை நிலைநாட்ட வேண்டுமானால், அதற்குத் தமிழ் நாடே சரியான களம். உலகம் முழுவதும் மத விரோதங்கள் இல்லாமல் ஒரே தெய்வத்தைத் தொழுது உஜ்ஜிவிக்கும்படி செய்யவல்ல மகான்கள் இப்பொழுது தமிழ் நாட்டில் தோன்றி யிருக்கிறார்கள். அது பற்றிய பூமண்டலத்தின் புதிய விழிப்பு தமிழகத்தே தொடங்கும் என்கிறோம்.

கூடாது. சிற்பத்தை விட்டுப் பிரிவது இனி சாத்தியமில்லை. அதை யாரும் பறித்துக் கொண்டு போகக் கூடாது' என்று கௌரியின் சிந்தனை ஓடிற்று. உள்ளேயிருந்து எஜமானியம்மாளின் குரல் கேட்டது. "ஐயோ, பொம்மையைக் காணுமே?"

அதை அடுத்து வேலைக்காரனின் குரல் ஒலித்தது. "ஏ பொண்ணு, நில்லு. சாமி, அம்மா, எல்லாரும் வாங்க. இதோ இருக்கிறாள் திருடியவள்..."

அவனும் மற்றொரு வேலைக்காரனும் கௌரியை நோக்கி ஓடிவர அவள் வீதியை நோக்கிப் பாய்ந்தாள். வீட்டுக்காரரும் எஜமானியும் அவர்களைத் தொடர்ந்து ஓட்டமும் நடையுமாய் நடந்தார்கள்.

பாலகிருஷ்ணன் வெளியே வந்தான்.

"திருடனா? இதோ நான் போய்ப் பிடித்து வருகிறேன்" என்று சொல்லிக் கொண்டு பாய்ந்து ஓடினான்.

மூச்சிரைக்க நடுத் தெருவிலே எதையும் பொருட்படுத்தாமல் ஓடினாள் கௌரி. என்ன நேர்ந்தாலும் பதுமையை விடுவதில்லை என்ற உறுதி அவள் உள்ளத்தையும் உயிரையும் ஊடுருவி நின்றது. தன் பொக்கிஷத்தை மார்புடன் சேர்த்து இரு கைகளாலும் இறுகப் பற்றிக் கொண்டிருந்தாள்—அப்படியே அழுத்தி அதைத் தன் இதயத்துள் வைத்து மூடிப் பத்திரப்படுத்தி விடுபவள்போல். ஒரு பயம், ஒரு ஆவேசம், ஒரு துயரம், இவை அவளை ஏவின; அவள் நிற்க முடியாமல் ஓடினாள், உணர்ச்சியின் அடிமையாக. உடலில் துடிப்பு, வியர்வை, அந்தராத்மாவில் ஒரு பிரார்த்தனை!

"தெய்வமே! என்னைக் காப்பாற்று, நீதான் கதி, நீதான் கதி."

தெய்வம் அவ்வளவு பிரத்யட்ச தெய்வமாயிருக்குமென்று அவள் எண்ணவில்லை.

வீதியில் ஒரு திருப்பத்தில் தன்னைத் துரத்தியவர் கண்களிலிருந்து தான் மறைந்தது, அவர்கள் அதோ என்று வேறொரு திக்கில் ஓடியது, இருட்டோடு இருட்டாயிருந்த ஒரு மரத்தடியில் தான் விழுந்தது,— எல்லாம் கண் மூடிக் கண் திறப்பதற்குள் நடந்து விட்டன போல் அவளுக்குத் தோன்றியது.

ஆகா! பொம்மை உடைந்து விட்டது. அவள் தன் உயிருக்கு உயிராக மதித்து வந்த பொம்மை உடைந்து விட்டது. அதுவும் தன்னுடைய அவசர புத்தியால் நேர்ந்தது என்பதை நினைத்தபோது அவள் உள்ளம் பதைத்தது. "அவர்கள் வீட்டிலேயே அந்தப் பொம்மை இருந்திருந்தால், நான் எப்போதாவது ஒரு நாள் அதைப் பார்க்கவாவது முடிந்திருக்குமே!" என்று நினைத்து அவள் மனம் அடைந்த வேதனை கொஞ்சமல்ல. பதற்றம் அடங்கி அவள் எழுந்து நிற்பதற்கும் பாலகிருஷ்ணன் அவள் எதிரில் வந்து நிற்பதற்கும் சரியாயிருந்தது. பயத்தினால் அவள் உடம்பு நடுங்கியது. ஓடவும் அவள் கால்கள் எழவில்லை.

"கௌரி, பயப்படாதே! நான் உன்னைப் பிடிக்க வரவில்லை. அவர்கள் யாரும் இந்தப் பக்கம் வரமாட்டார்கள். திருடனைப் பார்த்து விட்டவன் மாதிரி வேண்டுமென்றே நான் வேறு திசையில் ஓடி அவர்களையும் அலைக்கழித்து ஏமாற்றிவிட்டு, நான் உன்னைத் தேடிக் கொண்டு வந்தேன்!" என்று அன்போடு கூறினான் பாலகிருஷ்ணன்.

பாலகிருஷ்ணன் தன் பெயர் சொல்லி அழைப்பதைக் கேட்டதும் அவளுக்கு ஆச்சரியமாயிருந்தது; ஆனால், அதைவிடப் பொம்மை உடைந்து போனதில் துக்கம்தான் அதிகமாயிருந்தது. கௌரி தாங்க முடியாமல் விசித்து விசித்து அழுது விட்டாள்.

"கௌரி, அழாதே! உடைந்து போனது உன்னுடைய பொம்மையல்ல. உன்னுடைய பொம்மை வீட்டில் பத்திரமாயிருக்கிறது. நீ உன் பொம்மை என்று நினைத்து அவசரத்தில் வேறு பொம்மையை எடுத்து வந்து விட்டாய்!" என்றான் பாலகிருஷ்ணன்.

கௌரி தன்னையும் மறந்து, "என் பொம்மை இருக்கிறதா? உடையவில்லையா?" என்று பரவசத்துடன் கேட்டாள். பிறகு அவளை நாணமும் பயமும் சூழ்ந்து கொண்டன. "ஐயா, என்னை மன்னித்து விடுங்கள். உங்கள் வீட்டில் நான் திருட வரவில்லை..."

"ஆம், கௌரி, உன் பொம்மையைக் காணவே வந்தாய். தினந்தோறும் நீ அந்தப் பொம்மையை அவ்வளவு ஏக்கத்தோடும் ஆவலோடும் பார்ப்பதை நான் கவனித்திருக்கிறேன். உன் தம்பியின் மூலம் உன் பெயர் தெரிந்தது. உடைந்த பொம்மையைப் பற்றிக் கவலைப்படாதே. இப்போது உன்னை உன் வீட்டு வரையில் வந்து வழியனுப்புகிறேன். நாளைக்கு உன் பொம்மையை உனக்குப் பரிசாக அளிக்கிறேன். நீ கவலைப்படாதே!" என்று சொல்லிவிட்டுப் பாலகிருஷ்ணன் முன்னால் நடந்தான். தன்னை மறந்து கௌரி அவனைத் தொடர்ந்தாள். நட்சத்திரத்தின் மங்கிய ஒளியில் பாலகிருஷ்ணனின் களங்கமற்ற முகத்தில் கனிந்திருந்த எல்லையற்ற அன்பு கௌரியைப் பரவசப் படுத்தியது.


...கனவான்களே...
...நேர்த்தியான பூச்சிற்கு...
...பார்ப்பதற்கு கவர்ச்சிகரமானது...
...நீடித்த உறுதிக்கு
...உட்பூச்சிற்கோ, வெளிப்பூச்சிற்கோ...
...தொழிற்சாலைகளுக்கும், வீடுகளுக்கும்...
...அதைப்பற்றி சந்தேகமே இல்லை...
...அதுதான்... எல்லோரும் விரும்பும் ஸிந்தடிக் எனாமல்...
ஷாலிமார் சூப்பர்லாக்
ஸிந்தடிக் எனாமல்

உங்கள் பணத்திற்கு எல்லா
ரேடியோ பாட்டரிகளையும் விட
சிறந்ததையே வாங்குங்கள்

சக்தி நிறைந்தது

விலை குறைவானது
நம்பிக்கைக்கு உகந்தது
நீடித்து உழைக்கக்கூடியது




உங்கள் பணத்திற்கு அதிக மதிப்பு...
நீங்கள் செலவழிக்கும் பணம் சக்திக்காக...
பாக்கிங் சாதனங்களுக்காக அல்ல!

நீங்கள் செலவிடும் பணத்திற்கு ஏன் "எவரெடி" "மினிமாக்ஸை" விடச் சிறந்த ரேடியோ பாட்டரியை வாங்குவது என்று உங்கள் ரேடியோ வியாபாரியிடம் கேளுங்கள்

நீடித்து ஒழுங்காக உழைப்பதில் "எவரெடி" "மினி-மாக்ஸ்" ரேடியோ பாட்டரிக்கு ஈடு வேறு எதுவும் கிடையாது. ஏனெனில் இந்த பாட்டரியின் உள்ளே ஒவ்வொரு கன அங்குல இடத்திலும் மற்றெந்த ரேடியோ பாட்டரியையும் விட அதிகப்படியான வேலை செய்யக்கூடிய பொருள்கள் பொருத்தப்பட்டுள்ளன. தட்டையான செல்கள் அமைக்கப்பட்டிருப்பதால் இதன் பரிமாணமும் கனமும் குறைவாயிருக்கின்றன. ஆயினும் இது முழு சக்தியை அளிக்கக்கூடியது. இந்த அற்புதமான பாட்டரியை இன்றே வாங்கி உங்கள் ரேடியோவில் பொருத்துங்கள்!

**EVEREADY**
TRADE MARKS
**MINI-MAX**

எவரெடி மினி—மாக்ஸ் ரேடியோ பாட்டரிகள்

ஒரு நாஷனல் கார்பன் தயாரிப்பு



# இரட்டைக் கௌரவம்

**— சோபனா —**

"சுலோசனா! உன் அருமைப் பேராசிரியர் ஜயானந்தத்துக்குச் சரியான அடியாம்! கண்ணாடி நெற்றியில் பொத்து விட்டதாம். ஆஸ்பத்திரிக்கு ஆம்புலன்ஸ் காரில் கொண்டு போயிருக்கிறார்கள்!" என்று ரஞ்சனா என்னிடம் அவசரமாக ஓடி வந்து கூறியபோது என் உள்ளம் பீதியில் பதைபதைத்தது.

"என்னடி? என்ன விசேஷம்? பேராசிரியரை யார் அடித்தார்கள்?" என்று மிகுந்த ஆதுரத்தோடு கேட்டேன்.

"ஜயானந்தம் இரண்டு மணிக்கு வெளியே கிளம்பினாராம். மூன்று மணி வாக்கில் அவர் திரும்பும்போது பாதையில் இருவர் காரசாரமாகப் பேசிக் கொண்டு கை வீசிக் கொண்டிருந்தார்களாம். பேராசிரியர் அவர்களை விலக்கப் போயிருக்கிறார். மத்தியஸ்தம் செய்ய வந்த அவரை அவர்களில் முரடனாக இருந்த ஒருவன் ஒதுங்கிப் போகும்படி வற்புறுத்தியிருக்கிறான். ஜயானந்தம் தீர்மானமாகக் குறுக்கிடவே, அவனுக்கு மற்றவன் மேல் இருந்த கோபமெல்லாம் இவர்மேல் திரும்பியிருக்கிறது. அவருடைய மூக்குக் கண்ணாடி உடைந்து போய் அதன் துண்டு ஒன்று நெற்றியில் பாய்ந்திருக்கிறது. 'ஆம்புலன்ஸ்' வந்து அவரை ஆஸ்பத்திரிக்கு இட்டுச் சென்றிருக்கிறது. போலீஸார் அந்த ஆசாமிகளைத் தள்ளிக் கொண்டு போயிருக்கிறார்கள்!" என்று கூறினாள் ரஞ்சனா.

ஆசிரியர் ஜயானந்தத்தின் மேல் எனக்கு ஒரு பக்கம் பரிவும், மற்றொரு பக்கம் எல்லையற்ற கோபமும் கொந்தளித்துக் கொண்டு எழுந்தது. ஊர் தகராறில் எல்லாம் இவர் ஏன் அனாவசியமாகத் தலையிட வேண்டும்? தன் மதிப்பிற்குக் குறைவானவர்களிடமும், அவர் மதிப்பை அறியாதவர்களிடமும் அவர் பழகும் போதுதானே இப்படிப்பட்ட அவமதிப்பிற்கும் தாக்குதலுக்கும் அவர் ஆளாக நேருகிறது?

முன்னொரு சமயம் அப்படித்தான் நடந்தது. ஜயானந்தம் கொஞ்சம் முற்போக்குவாதி. அந்தக் கிறுக்கு அவரைப் பலகோணங்களில் சுழற்றிக் கொண்டிருந்தது. வேதாந்தம், மனோ தத்துவம் இவைகளைப் பிரமாதமாகப் போதிப்பார். புதுக் கருத்துக்களைப் பிரசாரம்செய்வதென்றால் அவருக்குமகிழ்ச்சி.

அன்று வகுப்பில் பொறுமையின் அவசியத்தைப் பற்றியும், அதைக் கைக்கொள்வது எப்படி என்பதைப் பற்றியும் விரிவாகவும், தீவிரமாகவும் பேசினார் அவர். சுவாரஸ்யமாக மாணவர்கள் யாவரும் அவருடைய பேச்சில் முழு கவனத்தையும் செலுத்திக் கேட்டனர். திடீரென்று வகுப்பின் நடுவில் உட்கார்ந்திருந்த பிரபாகரன் என்ற வாலிபன் எழுந்தான். எப்போதுமே தைரியசாலி அவன். குறும்பு சேஷ்டைகளிலும், துடுக்குத்தனமாகப் பேசுவதிலும் வகுப்பில் அவன்தான் மகாமேரு. அனாயசமாக நிமிர்ந்து உட்கார்ந்து பேராசிரியரை அலட்சியமாக ஒரு பார்வை பார்த்தான்.

மாணவர்களும் மாணவிகளும் அவனுடைய இந்தச் செய்கையைக் கண்டு வியந்து ஆசிரியரின் பிரசங்கத்தைக் கவனிக்காமல் அவன்மேல் நாட்டம் செலுத்தினர். பிரபாகரன் மற்றவர்கள் தன்னைக் கவனிக்கிறார்கள் என்று அறிந்தும் அதைக் கவனிக்காதவன்போல் எழுந்து வெளியே போனான்.

அவனுடைய செய்கை கல்லூரி விதிகளுக்கு முற்றிலும் முரணானது. ஆசிரியர் ஒருவர் பிரசங்கம் செய்து கொண்டிருக்கும்போது அவன் இப்படி அதிகப்பிரசங்கித் தனமாய் நடந்து கொண்டதற்கு, அவன் கல்லூரியை விட்டே அப்புறப்படுத்தப்படவேண்டியவன். ஜயானந்தம் ஆத்திரத்தினால் சீறி எழுந்து படபடப்பாக ஏதாவது சொல்வார் என்று மாணவர்கள் எண்ணி யிருக்க வேண்டும். ஒருமித்து அவர்கள் ஆசிரியர் பக்கம் திரும்பினார்கள். பிரபாகரன் நிதானமாகவும் அலட்சியமாகவும் ஆசிரியரைச் சிறிதும் லட்சியம் செய்யாமல் எங்கேயோ பார்த்துக் கொண்டே வந்து மீண்டும் உட்கார்ந்தான்.

புரொபசர் யாரும் எதிர்பார்க்காத விதமாய் கலகலவென்று நகைத்தார்.

"பிரபாகரா! உன் சோதனை பிரமாதம்! அதியற்புதம்! பொறுமையைப் பற்றிப் பிரமாதமாகப் பேசுபவரிடம் அது கொஞ்சமாவது ஒட்டிக் கொண்டிருக்கிறதா என்று தானே நீ பரிசோதிக்க விரும்பினாய்?" என்ற ஜயானந்தத்தின் உல்லாசமான பேச்சு மாணவர்களுக்குத் திகைப்பை விளைவித்தது.

பிரபாகரன் தன் சோதனையில் வெற்றி பெற்றாலும், சோதிக்க விழைந்ததற்காக மனம் குன்றித் தலை குனிந்தான்.

"அது எதுவாயிருந்தாலும் அவன் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்பட வேண்டும்!" ஆசிரியரின் அவமானத்தைத் தங்களது அவமானமாகக் கருதின மாணவர்கள் சிலர் உணர்ச்சி வசப்பட்டுக் கத்தினர்.

"உங்கள் மேல்தான் அந்த நடவடிக்கை எடுக்கப்பட வேண்டும்!" என்று சாவதானமாகச் சொன்னார் ஜயானந்தம்.

"நான் தவறுதலாக நடந்து கொண்டு விட்டேன். என்னை மன்னிக்க வேண்டும்!" என்று கெஞ்சினான் பிரபாகரன்.

"பிரபாகரா! நீதான் கெட்டிக்காரன். இப்படிப்பட்ட சோதனைக்கு உட்படுவதால் என்னிடம் உள்ள சக்தியும், மனோ வலிமையும் மாறாமல் இருக்கிறது என்று நான் உணர முடிகிறது. நானே அடிக்கடி அதைச் சுயமாகச் சோதனை செய்து கொள்பவன் தான். இன்று உன்னால் அந்தச் சோதனை செய்யப்பட்டது. சந்தோஷப்படுகிறேன்!" என்று ஜயானந்தம் கூறினார்.

ஜயானந்தம் இப்போது தன்னைத்தானே சோதனை செய்து கொள்ளும் அந்தச் செயலில்தான் ஈடுபட்டாரோ? அப்படி எண்ணி அவர் மத்தியஸ்தம் செய்திருந்தால் ....?

கடிகாரம் மூன்றரை மணியைக் காட்டிற்று. வீட்டில் இருந்தாலும் வேறு வேலைகள் ஜயானந்தம் நினைவால் தடங்கித்தான் போகப் போகின்றன. கொஞ்சம் முன்னடியே கிளம்பினால் மனமாவது நிம்மதிப்படும் என்ற நோக்கத்தில் காலில் செருப்பை மாட்டிக் கொண்டு கிளம்பினேன்.

கல்லூரி திறந்திருந்தால் ஜயானந்தருக்கு அடிபட்ட விஷயம் காட்டுத்தீபோல் எங்கும் பரவி யிருக்கும். விடுமுறை காலமானதால் பிரின்ஸிபாலும், ரஞ்சனாவைப் போல மற்றும் சிலரும்தான் அதைப்பற்றி அறிந்திருந்தார்கள். பரீட்சை முடிவு வெளியாகும் சமயமாதலால் பிரின்ஸிபால் 'போன்'மூலம் விவரத்தை அறிந்து கொண்டிருந்தாராம். ஆஸ்பத்திரியில் 'பார்வையாளர் அறையில் ஜயானந்தரைப் பார்க்கக் காத்திருந்தவர்களில் பிரபாகரன்தான் எனக்குப் பரிச்சயம் உள்ளவனாகக் காணப்பட்டான். என்னைக் கண்டதும் கலங்கியிருந்த தன் கண்களைக் கைக்குட்டையால் துடைத்துக் கொண்டே, "ஆசிரியர் இப்படி மோசமாக நடந்து கொள்வார் என்று நான் கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை. காட்டு பிராண்டிகளிடமும், துஷ்ட மிருகங்களிடமும் பழகும்போது சர்வ ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த அவ்வளவு பேருக்கும் இல்லாத கரிசனம் இவருக்கு ஏன் வந்தது?" என்று படபடத்தான் அவன்.

"நடந்தது நடந்து விட்டது. ஆசிரியருக்கு எங்கே அடிபட்டிருக்கிறது? உங்களுக்குத் தெரியுமா?" என்று வினவினேன்.

"இன்னும் கொஞ்ச நேரத்தில் தன்னால் தெரிந்து விடும். எனக்கு நிச்சயமாக எதுவும் தெரியாது!" என்று கூறிவிட்டு "இதோ கதவைத் திறக்கிறார்கள்!" என்று கூறிக் கொண்டே பெஞ்சிலிருந்து எழுந்தான்.

பேராசிரியர் ஜயானந்தம் இருந்த அறைக்குள் நாங்கள் பிரவேசித்தபோது அங்கே நாங்கள் கண்ட காட்சி மனம் பேதலிக்கும்படி இருந்தது. நெற்றியிலும், தலையிலும் பலமான கட்டுப் போட்டிருந்தது புரொபசருக்கு. ஒரு கண்ணை மட்டும்தான் திறந்து வைத்திருந்தார்கள். கண்ணில் அடிபடவில்லை என்று வார்டு நர்ஸ் சொன்னாள்.

"வாருங்கள்!" என்று எங்களைக் கண்டதும் வரவேற்றார் ஜயானந்தம். அவர் குரல் மெல்லிய இழைபோல் இருந்தது. உதட்டில் மட்டும் புன்முறுவல் மறையவில்லை.

"எப்படி இருக்கிறது?" என்று கேட்டான் பிரபாகரன். மற்றவர்கள் பேராசிரியரின் பதிலை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர்.

"ஒன்றுமில்லை. சின்னக் காயம்!" என்றார் ஜயானந்தம்.

"பிரபாகரா! இன்னும் உன் உள்ளத்திலிருந்து அவசர புத்தியும், ஆத்திரமும் போகவில்லை! 'அவர்கள் சண்டையிட்டுக் கொண்டால் இவருக்கு ஏன் இவ்வளவு அக்கறை?' என்று நீ நினைத்துக் கொள்வாய். அப்படித்தானே? இப்படியே ஒவ்வொருவரும் எண்ணினால் உலகத்துக்கு உய்வே கிடையாது. வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்களே அவ்வளவு ஜனங்கள், அவர்களில் நாலு பேராவது முன் வந்து குறுக்கிட்டிருந்தால் விஷயங்கள் இந்த அளவிற்கே வந்திராது.



# திருஷ்டி

## தோஷத்திற்கு

# ஆளாகாதீர்கள்!

அநேக நாடுகளில், வாழ்க்கையில் ஏற்படும் துக்கங்கள் சிறியதானாலும் பெரியதானாலும், திருஷ்டி தோஷத்தினாலேயே ஏற்படுவதாக நம்புகிறார்கள். அந்தத் தீய சக்தியை ஒடுக்க மிகவும் சிரமம் எடுத்துக் கொள்கின்றனர்.

உயிர் வாழ வேண்டுமென்ற ஆசை மனித குலத்துக்கு இயற்கையானது. அந்த இயல்பான உணர்ச்சியினால் உயிரைப் பாதுகாத்துக் கொள்ளும் ஆர்வம் உண்டாகிறது. பசித் துன்பம், பலஹீனம், முதுமைப் பிராயத்தைப் பற்றிய பயம், எல்லாம் ஒருங்கே சேர்ந்து உண்மையும் நிலையானதுமான ஒரு பாதுகாப்பை நாடுவது இயல்பு. ஒரு சிறு தியாகத்தின் மூலம் அந்தப் பாதுகாப்பை நீங்கள் அடையலாம். இன்றே விவரங்களுக்கு எழுதுங்கள்.

**எண்டவ்மெண்ட் அஷ்யூரன்ஸ்:**
ஒரு சிறந்த முறை முதலீடு: பாலிஸிதாரர் சீக்கிரமாக இறக்க நேர்ட்டால் அது குடும்பத்துக்குப் பாதுகாப்பாகிறது. அல்லது பாலிஸிதாரரின் வயோதிக காலத்தில் அவருடைய சொந்த உபயோகத்துக்கும் பயன்படுகிறது.



# பம்பாய் மியூச்சுவல்

## லைப் அஷ்யூரன்ஸ் சொஸைட்டி லிமிடெட்

*ஸ்தாபிதம்: 1871*

**பம்பாய் மியூச்சுவல் பில்டிங் - ஹார்ன்பி ரோடு - பம்பாய்-1**

*சீப் ஏஜண்டுகள்:* மெஸர்ஸ் எஸ். ஏ. ராமஸ்வாமி அண்டு பிரதர்ஸ்
பம்பாய் மியூச்சுவல் பில்டிங் அனெக்ஸ், 322-3, லிங்க செட்டித் தெரு, சென்னை-1

ஒவ்வொரு பாலிஸிதாரரும் ஒரு பங்குதாரர்

**EVERY POLICYHOLDER A SHAREHOLDER**

# கால்கேட்
# குளோரோபில் டூத்பவுடர்




## குளோரோபிலின் பூரண நன்மைகளை நீங்கள் உபயோகிக் கையில் தருகிறது!

## வீரிய குளோரோபில்தான் பலன் தரும்!

வீரிய குளோரோபிலின் நன்மைகளை எல்லாம் புதிய கால் கேட் குளோரோபில் டூத் பவுடர் தருகிறது வீரிய குளோ ரோபில் தான் வாய் நாற்றம், கிரிமிகளை நீக்கி ஈறுகளைப் பலப்படுத்துகிறது. கால்கேட் முறையில் குழந்தைகளுக்கு குளோரோபில் கவனிப்பை அளியுங்கள்—அரிய சந்தர்ப்பம்.



### வாய் நாற்றத்தை அழிக்கிறது

ஒரு விசேஷ சூத்திரம் காரணமாக கால்கேட் குளோரோபில் டூத்பவுடர் துரிதமாக, திருத்த மாக வேலை செய்கிறது. உங்கள் வாய் அதிகநேரம் புதுமை, இனிமையுடன் இருக் கிறது. அதன் வாசனை ஜோரானது!

### கி ரு மி க ளை  ஒ ழி க் கி ற து



சாப்பிட்டவுடன் கால்கேட் குளோரோபில் டூத் பவுடரை உபயோகிப்பதால் பற்களைச் சிதைக்கும் அமிலங்கள் ஒழிகின்றன.



### ஈ று க ளை  ப ல ப் ப டு த் து கி ற து

ஈறுகளை குளோரோபில் பலப்படுத்துகிறது. தினசரி கால்கேட் குளோரோபில் டூத் பவு டரை உபயோகிப்பதால் குளோரோபிலின் பூரண நன்மைகளைப்பெற்று ஈறுகளைப் பாது காக்கலாம்.




CTPG/1

அத்தனை பேரும் சும்மா வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒரு ஆசாமி யாவது, 'என்னுடைய சகோதரர்கள் ஒருவனோடு மற்றொருவன் சண்டையிட்டுக் கொள்ளுகிறானே, இது நியாயமா? இதை அனுமதித்து வளர விடலாமா?' என்று சிந்தித்துப் பார்க்கவில்லை!''

''சண்டைக்கு என்று வரிந்து கட்டிக் கொண்டு, விலக்க வந்தவரையும் பிடித்துத் தள்ளும்போது, அதை அலட்சியமாக எண்ணி இடையில் பாய்வது அழகா?'' என்று பிரபாகரன் ஆக்ரோஷத்தோடு கேட்டான்.

''பிரபாகரா! அதுதான் தவறு. அவனுக்கு ஏன் அந்த மனப்பான்மை ஏற்பட வேண்டும்? சற்று யோசித்துப் பார். எல்லாம் அங்கு கூடியிருந்தவர்களால் ஏற்பட்ட வினை தான். அவர்கள் தன்னை எங்கே 'பயந்தாங் கொள்ளி' என்று பட்டம் கட்டிவிடப் போகிறார்களோ என்ற முடிவால் ஏற்பட்ட பல ஹீனம்தான். மற்றவனும் அதே நிலையில், தான் பலமற்றவன் என்று உணர்ந்தும் தவித்துக் கொண்டிருந்தான். அந்த மற்றவன்மேல் ஏற்பட்ட பச்சாதாபம்தான் என்னை மீளமுடியாமல் தடை செய்தது. அவனுக்குத் தன்னை அந்த முரடனிடமிருந்து விடுவித்துக் கொள்ள உதவி தேவையாக இருந்தது. அவன் அதை யாசிக்கக் கூசினான். அதை நான் உவந்து அளித்தபோது...'' ஜயானந்தம் மூச்சுவிட பேச்சைச் சற்று நிறுத்தினார்.

''நன்றாக உவந்தளித்தீர்கள்! அப்படிப் பட்ட தன்மையுடையவன் சோனி நாயைப் போல் தன் வாலைக் கால்களுக்கிடையே மடித்து வைத்துக் கொண்டல்லவா செல்ல வேண்டும். வாலையும் ஆட்டிக் கொண்டும், உடம்பும் நோகாமல் இருக்க வேண்டுமென்று விரும்பினால் முடியுமா?''

''ஓடும் ஆசாமியைக் கண்டால்தான் துரத்துபவனுக்கு எளிது. வாலை மடித்துக் கொண்டு போனால்கூட அந்த சோனி நாயை யார் சும்மா விடுகிறார்கள்? அதைக் காட்டி 'சூ' விடுகிறார்கள்! அப்போது அந்த நாயால் என்ன செய்ய முடியும்?''

பிரபாகரன் பதில் எதுவும் பேசவில்லை. ஜயானந்தம் தாம் செய்ததைச் சரி என்று நிலைநாட்டி விட்டார்.

''அவர்கள் இருவரும் என்ன ஆனார்கள் தெரியுமா?'' என்றார் ஜயானந்தம்.

''ஆவது என்ன? 'லாக்கப்'பில் கொண்டு போய்த் தள்ளியிருக்கிறார்கள். 'நியூசென்ஸ் சார்ஜ்' செய்யப்பட்டிருக்கிறார்கள். அத்துடன் உங்களைத் துன்புறுத்தினது வேறு சேர்ந்திருக்கிறது. என்னைக் கேட்டால் தலைக்கு இரண்டு மாதமாவது திட்டினால்தான் நல்லது என்று சொல்வேன்'' என்று பிரபாகரன் வீராப்புடன் சொன்னான்.

''நிச்சயம்! அவசியமாக அத் தண்டனை கொடுக்க வேண்டியதுதான். இல்லாவிட்டால் அவர்கள் சீர்திருந்த மாட்டார்கள்! இல்லையா பிரபாகரா?'' ஜயானந்தம் கேலி யாக நகைத்தார். எல்லோரும் ஜயானந்தத்தின் முகத்தைக் கூர்ந்து பார்த்தார்கள்.

''அப்போது இந்தப் பிரபாகர மகா பிரபு அவர்களுடைய குடும்பங்களுக்கு வாரி, வாரி இறைப்பார். சிறையிலிருந்து அவர்கள் திரும்பி வரும் வரையில் அவர்களுடைய பெண்டாட்டி, பிள்ளைகளைக் காப்பாற்றுவார்!'' ஜயானந்தத்தின் வார்த்தைகளைக் கேட்டுப் பிரபாகரன் சிரம் கவிழ்ந்து கொண்டான்.

''பிரபாகரா! நீதான் இவ்வுலகத்தை அப்படியே பிரதிபலிக்கிறாய்! ஆத்திரத்தால் தங்களுடைய நிலை தவறி, தாங்கள் செய்யும் செயல்களைப் பற்றி அறியாது மிருகமாய் நடந்து கொண்ட அவர்களுக்கு இப்படித் தண்டனை அளித்தால், உலகத்தில் உள்ள அவ்வளவு பேர்களும் தங்கள் வாழ்க்கையில் அநேக மாதங்கள் இப்படிப்பட்ட தண்டனையை அடைய வேண்டியதுதான்! சிலர் செய்கையில் அதைக் காட்டும்போது அதனால் ஏற்படும் சேதம் குறைவு. என்னைப் போல் சிலர்தான் அதனால் துன்பமடைகிறார்கள். ஆனால் வார்த்தைகளால் தாங்களும் மிருகமாக நடந்து, மற்றவர்களையும் மிருகமாக நடக்கத் தூண்டுபவர்களுக்கு?... இன்று உலகத்தில் உள்ள தலைவர்களில் பெரும்பாலோர் சிறையில் தள்ளப்பட வேண்டியவர்கள்தான்...!''

ஒரு விநாடி அமைதி நிலவிற்று!

''அதெல்லாம் போகட்டும். நான் சப்-இன்ஸ்பெக்டருக்கு ஒரு விண்ணப்பம் அனுப்ப விரும்புகிறேன். உங்களில் யார் கொஞ்சம் தங்கி அதைத் தயாரிப்பதில் எனக்கு உதவி புரிய முடியும்?'' என்று ஆசிரியர் கேட்டார்.

''என்ன விண்ணப்பம்? அவர்களை விடுதலை செய்யச் சொல்லியா? அப்படியென்றால் நான் அதற்கு உதவ மாட்டேன்'' என்று பிரபாகரன் ஆத்திரத்தோடு சொன்னான்.

---

**பாரதி வாக்கு**

சிறு தொகையான மனிதருக்கு அடுத்த வேளை ஆகாரம் கிடைப்பது நிச்சயமாகவும், பெருந் தொகையோர்க்கு அடுத்த வேளை சோறு நிச்சயம் இல்லாமலும் ஏற்பட்டிருக்கும் சம்பிரதாயம் மனிதரைத் தவிர, வேறு எந்த ஜாதி ஜீவர்களிடத்திலும் கிடையாது. ''காகம் உறவு கலந்துண்ணக் கண்டீரே.''

இந்த அம்சத்தில் மனிதர்களுடைய நாகரிக நிலை மற்றெல்லா மிருகங்கள், பட்சிகள் முதலியவற்றின் நாகரிக நிலையைக் காட்டிலும் தாழ்வானது என்பதில் சிறிதேனும் சந்தேகம் இல்லை. இதில் வேறொரு விஷயம் யாதெனில், மனித ஜாதிக்குள்ளே கூட மற்ற எல்லாவகுப்பினரைக் காட்டிலும், இந்தியர்கள் அதிக இகழ்ச்சி யடைந்து அதிகப் பரிதாபகரமான ஸ்திதியில் இருக்கிறார்கள்.

---

"விடுதலை செய்வதோடு மட்டுமல்ல; உன்னைப் போன்ற ஆத்திரக்காரர்களிட மிருந்தும் அவர்களுக்குப் பாதுகாப்பு கொடுக்கச் சொல்ல வேண்டும். சுலோ, நீ கொஞ்சம் இருக்கிறாயா?" என்று என் பக்கம் பார்த்துக் கேட்டார் ஜயானந்தம்.

"உம்" என்று தலையசைத்தேன் நான்.

பார்வையாளர்கள் வெளியேற வேண்டிய நேரத்தை அறிவிக்கும் மணி ஒலித்தது.

"'விழலுக்கு நீர் பாய்ச்சி மாயமாட்டோம்' என்றார் பாரதியார். நீங்கள் சொரியும் அன்பு பாலைவனத்தில் பெய்யும் மழைதான். அவர்கள் அதற்காகக் கொஞ்சமாவது பச்சாதாபப்படப் போகிறார்களா?" பிரபாகரன் இப்படிச் சொல்லிவிட்டு எழுந்தான்.

ஜயானந்தம் பதில் எதுவும் பேசவில்லை. ஒவ்வொருவராக விடை பெற்றுக் கொண்டு நகர்ந்தனர். ஜயானந்தம் ஏற்கனவே ஒருவரைத் தம்முடன் நிறுத்தி வைத்துக்கொள்ள அனுமதி பெற்றிருந்தாராம்.

ஜயானந்தம் நான் எழுத வேண்டியதைச் சொல்லிக் கொண்டிருந்த போது என் கை பாட்டில் அவர் சொன்னதைத் தீட்டினதே தவிர உள்ளம் மட்டும் பேராசிரியரின் பெருந்தன்மையையும், உதார புத்தியையும் பாராட்டிக் கொண்டிருந்தது.

"......கைகலப்பு ஏற்படவோ, அதில் நான் மத்யஸ்தத்திற்குப் போய் அடிபடவோ முக்கிய காரணம் சூழ்ந்து கொண்டு வேடிக்கை பார்த்தவர்கள்தான். அவர்கள் அங்கு கூடாமல் இருந்திருந்தால் வாய்ப் பேச்சுத் தடித்தோ, கை நீட்டும் அளவிற்கோ வந்திராது. தாங்கள் அவ்விருவர் மேலும் வழக்குத் தயாரித்திருந்தால் அது முற்றிலும் நேர்மையற்றது. அவர்கள் இருவரும் உண்மையிலேயே நிரபராதிகள். ஒவ்வொரு மனிதனிடமும் உள்ள வறட்டுக் கௌரவம் தான் அவர்களிடமும் இருந்தது. அதன் பிரதிபலிப்புத்தான் அவர்கள் சண்டையிடக் காரணமாக இருந்தது. தாங்கள் அவர்கள் மேல் எடுக்க விருக்கும் நடவடிக்கையைக் கைவிட்டு விட்டு அவர்களை விடுவிக்க வேண்டும். அப்படியும் தாங்கள் நடவடிக்கை எடுக்க முற்பட்டால், அது உங்களிடம் தோன்றும் அதுபோன்ற வறட்டுக் கௌரவத்தின் பிரதி பலிப்புத்தான்...நீங்கள் இயல்பாக நடந்தவைகளை ஒருவர் வற்புறுத்தியும் கூட ஏற்றுக் கொள்ளத் தயங்குகிறீர்கள்! நீங்கள் ஏதாவது நடவடிக்கை எடுக்கத்தான் வேண்டும் என்று விரும்பினால் அங்கு கை கட்டிக்கொண்டு வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தவர்களை யெல்லாம் பிடித்து, ஒரு அரை மணி நேரமாவது 'லாக் அப்'பில் வைப்பதுதான் பொருந்தும்...என்னுடைய இந்த விண்ணப்பம் ஏற்றுக் கொள்ளப்படும் என்று நினைக்கிறேன்..."

ஜயானந்தம் சாவதானமாகக் கையெழுத்திட்டு அதை உடனடியாக சப்-இன்ஸ்பெக்டரிடம் சேர்க்கும்படி யாரிடமோ சொன்னார். பிறகு என்னைப் பார்த்து, "சுலோ, ஒரு அரைமணி நேரம் தாமதித்த பிறகு என்ன நடக்கப் போகிறது என்பதைப் பார்!" என்று முறுவலுடன் இயம்பினார்.

ஆஸ்பத்திரியில் அரை மணி கழிவது பெரிய காரியமாகவே படவில்லை. அரை மணிக்கு முன்பாகவே அந்த ஆச்சரியகரமான சம்பவம் நடைபெற்றது.

கடிதத்தை எடுத்துக்கொண்டு போனவன் இரண்டு ஆசாமிகளை அழைத்துக் கொண்டு திரும்பி வந்தான்.

"இன்ஸ்பெக்டர் அவர்களை வெளியில் விட்டு விட்டார். அவர்கள் இருவரும் உங்களைக் காணவேண்டும் என்ற ஆவலோடு வந்திருக்கிறார்கள். வரச் சொல்லட்டுமா?" என்று கேட்டு விட்டு இன்ஸ்பெக்டர் கொடுத்த சிறு சீட்டை அவர் கையில் கொடுத்தான். ஜயானந்தம் தம் சம்மதத்தைத் தெரிவித்தார். மறு விநாடி இருவரும் ஆதுரத்தோடு உள்ளே பிரவேசித்தார்கள். ஜயானந்தரின் படுக்கையருகில் வந்து அவர் நிலையைக் கண்டதும் திடமாக இருந்த ஒருவன் கேவிக் கேவி அழுதான்.

"ஆத்திரம் என் கண்ணை மறைத்து விட்டது! அவர்களிடம் நான் அநாகரிகமாக நடந்துகொண்டு விட்டேன்!" என்று தன் விக்கலிடையே சொன்னான் அவன்.

ஆசிரியர் என்னைப் பார்த்தார்.

"பார்த்தாயா சுலோ! அவசர புத்தியாலும், சூழ்நிலையாலும், வறட்டுக் கௌரவத்தில் மனிதன் தன் அறிவை இழக்கிறான். பிறகு அது தெரியும்போது வருத்தப்படுகிறான்..." என்று என்னைப் பார்த்துச் சொல்லிவிட்டு, அழுதவனைப் பார்த்து, "நடந்தபின் சென்றதை எண்ணி 'வருத்தப் படுவதில் பிரயோசனமில்லை. இனிமேல் அந்தமாதிரி நெருக்கடியை ஏற்படுத்திக் கொள்ளாமல் இரு!" என்று போதகரைப்போல் இயம்பினார்.

"நாங்கள் எங்கள் ஆயுளில் இனிமேல் சண்டையிட்டுக் கொள்ள மாட்டோம்!" என்று கூறினான் மற்றவன்.

"நீங்கள் மட்டும் அப்படித் தீர்மானித்துக் கொள்வதில் பிரயோசனமில்லை. மற்றவர்களும் சுயபுத்தியை இழக்காதவாறு பார்த்துக் கொள்ளுங்கள். முதல் முதலில் அந்த வேடிக்கை பார்க்கும் கும்பலை விரட்டுங்கள். அதுதான் இவ்வளவு கோரச் செய்கைகளுக்கும் தூண்டுகோல்..." என்று ஜயானந்தம் அழுத்தம் திருத்தமாகச் சொன்னார்.

அவர்கள் மெல்ல நகர்ந்த பிறகு இன்ஸ்பெக்டர் அனுப்பியிருந்த சீட்டைப் பார்த்து விட்டு ஜயானந்தம் அதைச் சிரித்துக் கொண்டே என் பக்கம் நீட்டினார்.

அந்தச் சீட்டில் "நான் வறட்டுக் கௌரவம் பாராட்ட வில்லை" என்று நாலே வார்த்தைகளை எழுதிக் கையெழுத்திட்டிருந்தார் போலீஸ் இன்ஸ்பெக்டர்.

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras 10.


நாளுக்கு நாள் அதிக தெளிவான,
எழிலோங்கும்
சருமம்
கேடில் கலந்த
ரெக்ஸோனு
இந்த அற்புத
வேலையைச்
செய்யட்டும்.
ரெக்ஸோனுவின் கேடில் கலந்த நுரையை உங்கள் சருமதநில் மெதுவாகத் தேய்த்து பிறகு கழுவுங்கள் உங்கள் சருமம் நாளுககு நாள் அதிக மழமழப்பும் தெளிவும் பெறுவதைக் காண்பீர்கள். அதனுல் புதுப் பொலிவுடன் விளங்குவீர்கள்
Rexona
Rexona
ரெக்ஸோனு
கேடில் கலந்த சோப் இதுவொன்றே
சருமத்திற்கு ஊட்டமளித்து மிருதுவாக்கும் எண்ணெய்களின் பிரத்தியேகக் கலவையின் ரெஜிஸ்டர் செய்யப்பட்ட பெயர்.
RP. 123-50 TM
ரெக்ஸோனு ப்ரொப்ரைட்டரி லிமிடெட்டுக்காக இந்தியாவில் தயாரித்தது.

REGISTERED No. M. 4392

*Registered as a news paper in Ceylon*

